# ரத்ன பரீக்ஷை



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்



சரசுவதி மகால் நூலகம்
மற்றும் ஆய்வு மையம்
தஞ்சாவூர்

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 126

# ரத்ன பரீக்ஷை


பதிப்பாசிரியர்கள்:

**திரு. கே. எஸ். சுப்ரம்மண்ய சாஸ்திரிகள்**

முன்னாள் பண்டிதர்

சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்

**திரு. வே. கோபாலய்யங்கார்**

முன்னாள் நூலகர்

சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்






*தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்*

**சரசுவதி மகால் நூலகம்**

**மற்றும் ஆய்வு மையம்**

**தஞ்சாவூர்**

2016 ]

[ விலை ரூ.100-00

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | |
|---|---|
| நூற்பெயர் | : ரத்ன பரீக்ஷை |
| பதிப்பாசிரியர் | : கே. எஸ். சுப்ரம்மண்யசாஸ்திரிகள் வே. கோபாலய்யங்கார் |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர் |
| வெளியீட்டு எண் | : 126 |
| மொழி | : சம்ஸ்கிருதம் - தமிழ் |
| பதிப்பு | : ஆறாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : 2016 |
| தாள் | : TNPL. 18.6 கி.கி. |
| நூல் அளவு | : 21 x 14 செ. மீ |
| பக்கங்கள் | : 134 |
| படிகள் | : 500 |
| எழுத்து | : 18 &12 |
| அச்சிட்டோர் | : சரசுவதி மகால் நூலகம் |
| புத்தகக்கட்டு | : மெலிந்த அட்டை |
| பொருள் | : நவரத்தினங்களின் குணங்கள் |
| விலை | : ரூ.100.00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின் சரசுவதி மகால் நூலகம் தமிழ், சம்ஸ்க்ருதம், தெலுங்கு மற்றும் மராட்டி மொழிகளில் நாற்பதாயிரத்திற்கும் மேற்பட்ட சுவடிகளைப் பாதுகாத்து வருகின்றது. மேலும் இவற்றில் வெளிவராத அரிய சுவடிகளை மொழிப்பண்டிதர்கள், துறை வல்லுநர்கள் மற்றும் சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்களை நியமித்து அவர்களைக்கொண்டு நூல்களாக பதிப்பித்து வெளியிட்டு வருகின்றது. அவ்வரிசையில் ரத்ன பரீக்ஷை என்னும் இந்நூல் தற்பொழுது ஆறாம் பதிப்பாக வெளியிடப்படுகிறது.

இந்நூலில் இரத்தினங்களின் உற்பத்தி, அவைகளின் குணதோஷங்கள், பிரிவுகள், இரத்தினத்தை அணியும் முறை போன்ற பல்வேறு கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. மேலும் செயற்கை இரத்தினங்கள் செய்யும் முறையும் கூறப்பட்டுள்ளது. சிப்பிக்குள் முத்து தோன்றும் என்றும், பாம்பு, யானை இவைகளின் தலையிலுருந்தும் முத்து தோன்றும் என்ற செய்தியும், கடலில் கொடியுடன் தோன்றுவது பவழம் என்றும் விளக்கப்பட்டுள்ளது. இந்நூலை சிறப்பாகப் பதிப்பித்தளித்த இந்நூலக முன்னாள் சமஸ்கிருத பண்டிதர் திரு. கே. எஸ். சுப்ரம்மண்ய சாஸ்திரிகள் மற்றும் இந்நூலக முன்னாள் நூலகர் திரு. வே. கோபாலய்யங்கார் ஆகியோர்களுக்கு என் பாராட்டுக்கள்.

இந்நூல் வெளிவரத் தேவையான நிதியுதவி நல்கிய அர்சுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூல் நன்கு வெளிவர ஆவன செய்துள்ள சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் திருமதி அ. பூங்கோதை, M.A., அவர்களுக்கும், நூலகர் முனைவர் எஸ். சுதர்ஷன். M.A.,B.Lit.,M.L.I.S.Ph.D., அவர்களுக்கும், ஒளியச்சு மற்றும் கணினி அச்சகப் பிரிவினருக்கும் மற்றும் நூலகப்பணியாளர்களுக்கும் என் பாராட்டுக்கள்.

இந்நூல் இரத்தின வகைகள் குறித்து ஆய்வு செய்பவர்களுக்கும், இத்துறைத் தொடர்பான ஆர்வலர்களுக்கும், மாணவர்களுக்கும் பெரிதும் பயன்படும் என்பது திண்ணம்.

தஞ்சாவூர்
28.08.2016

**ஆ. அண்ணாதுரை,** இ.ஆ.ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.



# வெளியிடுவோர் முன்னுரை



'ஒன்றே குலம்', ஒருவனே 'தேவன்', 'இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்' என இருவகைப் பகுப்பு. மேலும் ஆண், பெண் இருபாலர் தொகுப்பு. மூவுலகு, நான்மறை, ஐவகை நிலம், அறுமுகம் அறிவார்ந்த மனிதர்க்கு ஆறு கட்டளைகள், ஏழு பிறப்பு, எண்வகை குணங்கள், நவகோள்கள், நவரத்தினங்கள், இன்னும் பத்துக்கள், நூறுகள், ஆயிரங்கள், லட்சங்கள், பின்பு கோடிகள். இவ்வாறாக ஒன்றில் தொடங்கி முடிவுறாத எண்ணிக்கை வரும் வரையிலும் அல்லது வராத வரையிலும், எண்கள் வளர்ந்து வந்தபோதிலும், எண்களில் ஒன்பதுக்குப் புகழ் அதிகம். நவமணிகள், நவரசங்கள், நவரத்தினங்கள் என்று மண்ணையும், விண்ணையும் தொட்டு வியாபித்திருப்பது நவம்.

சிப்பிக்குள் முத்து உண்டாகும் என அறிந்துள்ள நமக்கு தவம் செய்வோர்க்கு யானை, பாம்பு இவைகளின் தலையிலிருந்தும் முத்து தோன்றும் என்ற செய்தியும், மாணிக்கப் பரல்கள் எட்டுவிதமானவை என்றும், ஐவகைக் குணங்கள்கொண்ட மரகதத்தை அணிந்துகொண்டால் அனைத்து தீவினைகளும் அகலும் என்றும், அதே சமயம் ஒளிகுன்றிய, மலிவான மரகதத்தை அணிந்துகொள்ள நேர்ந்தால், மனிதர்க்குக் காது செவிடாகிவிடக்கூடும் என்பதும், இந்திர நீலம் நால்வகையானது என்பதும், படிகவகை இரத்தினம் கதிரவன் ஒளிபட்டவுடன் நெருப்பைக் கக்கியும், சந்திர ஒளிபட்டவுடன் நீர் பெருகியும் திகழ்வது எனவும், 'வைடூர்யம்' புகை நிறமாக சிறிது கரு நிறம் கலந்த வெண்மையானது எனவும், கோமேதகம் தேன்பொட்டு நிறமானதென்றும், சேது சமுத்திரத்தில் கொடியுடன் தோன்றுவது பவழமெனவும், இது தேவர்களையும் கவரவல்லது எனவும், 'நவரத்தினங்களின் இயல்புகள்' இந்நூலில் குறிக்கப் பெற்றுள்ளன.

நவரத்தினங்கள் தோன்றும் இடங்களை வைத்து மனித குலத்தை நால்வகைப் பிரிவுகளாக விளக்கும் இடம் மட்டும் தற்காலத்திற்கு ஒவ்வாத ஒன்று என்ற போதிலும், நவரத்தினங்களை விரும்பாதார் யார்? வடமொழியில் அமைந்துள்ள பாக்கள் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளதால் நவரத்தினக் குணங்கள் அவை தோன்று மிடங்கள். அவற்றை அணிந்துகொள்வோர்க்கு ஏற்படும் சாதக பாதக நிலைகள் குறித்தும் நாம் எளிதில் அறிந்து கொள்ள இந்நூல் வகை செய்கிறது. நவரத்தின மோதிரம் அணிந்துகொள்வோர்க்கு இந்நூல் நல்துணை யாகும். அணிந்துகொள்ள வாய்ப்பில்லாதவர்க்கு இந் நூலே நவரத்தின மோதிரமாகும்.

இயற்கை இரத்தினங்களிலிருந்து செயற்கைக் கற் களைப் பிரித்துப் பார்க்கவேண்டிய இரத்தின வணிகப் பெருமக்களுக்கு இந்நூல் மிகவும் பயன்தரும் எனக் கருது கிறேன். குறிப்பாக இரத்தின வகைகள் குறித்து ஆய்வு மேற்கொள்வோர்க்கு இந்நூல் பெரிதும் உதவியாக இருக்கும் என நம்புகிறேன்.

இந்நூலை மறுபதிப்பாக அச்சிட நிதியுதவி அளித்த மைய அரசுக்கு எனது மனமார்ந்த நன்றியினை உரித் தாக்குகிறேன்.

இந்நூல் நன்முறையில் நான்காவது பதிப்பாக வெளி வரச் செயலாற்றிய இந்நூலக நிர்வாக அதிகாரி திரு. சீ. கிருஷ்ணன் அவர்களுக்கும், நூலக வெளியீட்டு மேலாளர் மற்றும் நூலகர் திரு. அ. பஞ்சநாதன் அவர் களுக்கும், நூலக அச்சகத்தாரனைவருக்கும் எனது பாராட்டுக்களை வழங்கி மகிழ்கிறேன்.

இங்ஙனம்.

மா. இராமு, இ. ஆ. ப.,

தஞ்சாவூர் — மாவட்ட ஆட்சியர் மற்றும் இயக்குநர் பொறுப்பு
15—3—1988 — சரசுவதி மகால் நூலகச் சங்கம்.

## எமது வெளியீடுகள்

| | ரூ-பை. |
|---|---|
| 1. தமிழ் எண்ணும் எழுத்தும் | 150-00 |
| 2. நட்சத்திர சிந்தாமணி பாகம்-1 | 310-00 |
| 3. நட்சத்திர சிந்தாமணி பாகம்-2 | 200-00 |
| 4. நட்சத்திர சிந்தாமணி பாகம்-3 | 250-00 |
| 5. மாடு, குதிரை வைத்தியம் | 180-00 |
| 6. கொங்கணர் சரக்கு வைப்பு (நூறு) | 100-00 |
| 7. சதாசிவத்தியானம் | 90-00 |
| 8. கொடுந்தமிழ் | 250-00 |
| 9. பாண்டு, காமாலை சிகிட்சை | 150-00 |
| 10. ஞானக் குறவஞ்சி | 70-00 |
| 11. ஜ்வர ரோக சிகிட்சை | 185-00 |
| 12. குன்மரோக சிகிட்சை | 240-00 |
| 13. திருப்பெருந்துறைப் புராணம் | 320-00 |
| 14. தொல்காப்பியம் | 270-00 |
| 15. திருமுருகாற்றுப்படை உரை | 320-00 |
| 16. சித்திர புத்திர அம்மானை | 120-00 |
| 17. இலக்கண விளக்கம்-செய்யுளியல் | 230-00 |
| 18. இலக்கண விளக்கம்-பாட்டியியல் | 500-00 |
| 19. இலக்கண விளக்கம்-அணியியல் | 310-00 |
| 20. ஆசிரிய நிகண்டு பாகம்-1 | 600-00 |
| 21. ஆசிரிய நிகண்டு பாகம்-2 | 40-00 |
| 22. அழகரந்தாதி | 100-00 |

# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்

**மாவட்ட ஆட்சித்தலைவர்**
**மற்றும் இயக்குநர்**
சரசுவதி மகால் நூலகம்.

# முன்னுரை

"இரத்தின பரீட்சை" என்னும் இந் நூலானது வைரம் போன்ற இரத்தினங்கள் கிடைக்கும் இடம், அவற்றின் குணம் முதலிய வற்றைப்பற்றி விளக்கமாகக் கூறுகிறது.

இந்நூலின் மூலம் சமஸ்கிருதமாக இருந்த போதிலும், தமிழில் மொழிபெயர்ப்பு இருப் பதால் இந்நூலை வடமொழி தெரியாத மக்களும் படித்துணர முடியும்.

இந்நூல் இயற்கை இரத்தினங்களின் குணங்கள் பற்றிக் கூறுவதால், இரத்தின வியாபாரிகளும், பிறரும் இயற்கை இரத்தினங் களை செயற்கை இரத்தினங்களினின்றும் பிரித் துணர முடியும்.

இதில் செயற்கை இரத்தினங்கள் செய்யும் முறையும் கூறப்பட்டுள்ளது.

இந்நூலை மறுபதிப்பாக அச்சிட மான்யம் அளித்த மத்திய அரசாங்கத்திற்கு எங்களது மனமார்ந்த நன்றி.

இந்நூலை சிறப்பாக அச்சிட்டு, மறுபதிப்பாக வெளிவர உதவிய தஞ்சை சரசுவதி மகால் நூலக அலுவலர் அனைவருக்கும் நன்றி.

இங்ஙனம்,

துரை. சுந்தரேசன், I. A. S.,
மாவட்ட ஆட்சியர் & நிர்வாகக் குழுத் தலைவர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்,
23—10—80.



# PREFACE

The T. M. S S. M. Library. Thanjavur has been rendering useful service for over twenty years in the preservation and propagation of ancient Indian cultnre by bringing out 'from the dark unfathomed caves' of its literary ocean, 'many a gem of purest ray serene.' While the previous publicotions of the Library may be called gems in a metaphorical sense, here is a work literally on gems, the RATNA PARIKSA.

Two of the works which are got up together in this small volume were originally published in the year 1958 as serial articles in the T.M.S.S.M. Library Journal with text in Devanagari and a lucid translation into Tamil by Thiru K. S. Subramanya Sastri, who was a Sanskrit Pandit in the Library and has edited many works especially on Mantra and Silpa Sastras. for the Library. The booklets were first released as off-prints from the Journal; and now, they are placed before the public in book form. The book has been revised, enlarged and re-edited by Professor V. Gopala Iyengar, our Librarian. a leading scholar in Sanskrit. English and Tamil. The text has been improved in several cases with reference to the original manuscripts, the

translations have been modified wherever necessary and extracts from some other manuscripts on the same subject and an informative introduction in English. have been added. Exhaustive tables of contents both in Sanskrit and Tamil have been provided for the benefit of such among the readers who may like to have a taste by a sip of the contents before drinking deep.

As the subject is one of common interest, it is fervently hoped, the publication will be welcomed not only by the scholars and specialists in Gemmology but also by the general public who are interested in the knowledge of our ancient lore about gems.

Thanjavur,
1—3—1969

S. KANDASWAMY,
*Honorary Secretary.*



# INTRODUCTION

The word RATNA. derived from Sanskrit root RAM denotes philologically an object of delight or a coveted object. In this sense, it occurs in the first stanza of Rigveda, the earliest available literary utterance. There Agni, the God of fire is invoked as RATNADHATAMA the greatest conferer of all coveted objects. The word has been subsequently used to denote the best object in any species, in compound words like NARI-RATNA, the best among ladies, SUKTIRATNA, the noblest among wise saying etc. In its most general connotation, the word denotes adjectively any precious object. As a common noun, it signifies the precious stones, or gems characterized by brilliance and lustre. and it is in this sense that the word finds its place in the title of this book.

Since gems, on account of tneir charming colour and brilliant lustre, have been used as articles of ornament and decoration from very ancient times. the need for testing their purity and of correctly evaluating their worth has also engaged the attention of the wise men of the past and many works on this subject have appeared at different ages from the distant past. The need for such treatises become more imperative as there existed and still exists a popular belief that certain categories of defect in the gems produce serious evil consequences and that the presence of certain kinds of merit is conducive to great

auspiciousness and prosperity for the wearer. his dependants, his home and even his environment. It is also believed that the different gems are associated with the several planets and that by wearing one or another of these gems, the beneficient effect is enhanced and the malefic effects mitigated of the respective planet.

Gems have their role to play in Medical Science, as well, since some gems are used as components of medicinal preparations and all gems have their curative faculties in psychic therapy. Thus, a study of the science of testing gems is a necessary and profitable persuit for the jeweller with his commercial motive, the physician with his pharmaceutical purpose and the connoisseur and the beauty culturist with his artistic taste.

Vyasa, Agastya, Varahamihira and host of sages and great writers of the past are mentioned as having compased works on Ratna Sastra or Science of Gems. In the present work itself, ancient writers on the subject like Agastya, Bharadvaja, Angirasa and ancient works like Ratna Sastra, Utpalaparimala, Visvakarmiya, Smrtisarasangrah and Vahata have been cited. Recently two works on this subject, Ratnadipika by Candesvara and Ratnasastra by Bhuddhabbata have been published by the Government Oriental Manuscripts Library, Madras.

The two works contained in this booklet deal with a wide variety of topics concerned with

gems. Like many other Hindu branches of learning, the science of gems is interlinked with a good deal of mythological and legendary lore. Different legendary versions are given about the orgin of gems. The extract from Smrtisarod-dhara narrates how Indra slew the demon Vrtra and how the several limbs of the demon's body were metomorphosed into different kinds of gems; the most precious among them having been named as Vajra or diamond. Agastya's Ratna Sastra mentions Bala as the demon whose body underwent such a rich transformation. The legend explains that the demon's bones were transformed into diamonds, his teeth into pearls. his drops of blood into rubies, his hairs into lapiz-lazuli, his flesh into corals, his eyes into saphire his bile into emerald. his phlegm into topaz and his fat into cat's-eye gems. These episodes may as well remind one of Shakespeare's poetic fancy in Ariel's song in "The Tempest"

" Full fathom five they father lies;
Of his bones are coral made;
Those are pearls that were his eyes;
Nothing of him that doth fade
But doth suffer a sea-change
Into something rich and strange".

There are other similar legends giving different orgins to some other gems. One verse in Isvara Diksitiya (P 72) however approaches the realistic explanation saying. Others hold that stones by the passages of long ages are transformed into gems by the intrinsic nature of those parts of the earth".

Apart from the legends which only serve the purpose of glorification of gems. the bulk of the works are devoted to an elaborate account of practical details about gems. The number of gems are enumerated differently in different works. Out of the nine gems that are popularly known under the collective name of NAVARATNA. 1. Vajra (Diamond), 2. Mukta (Pearl), 3. Manikya or Padmaraga (Ruby), 4. Indra nila (Srphira) and 5. Marakada (Emarald) are considered to be PANCHA MAHA RATNA, the five major gems and the other four. 6. Vidruma (Coral), 7. Gomedaka (Cat's eye gems). 8. Pushparaga (Topaz) and 9. Vaidurya (Lapiz lazuli) are mentioned as UPARATNA, minor gems. Utpala Parimala enumerates twenty-two varieties of gems adding to the popular list of nine gems, thirteen more varieties namely 10. Karketana, 11. Rudhiraksa, 12. Vipula, 13. Vimalaka 14. Rajamani, 15. Sphatika, 16. Chandrakanta. 17. Saugandhika, 18 Sankha. 19. Mahanila, 20. Brahmamani, 21. Jyotirasa and 22. Sivyaka. Only some of these are dealt with in the texts and others are passingly mentioned.

The several geographical regions where the different gems are found and the respective characteristics and qualities of the same kind of gem occurring in different places are given in the course of the texts. The characteristic features of the gems and the distinguishing marks of their varying quality are set forth at length for each kind of gem. Special attention is devoted in the text to the description of the merits and the defect and the auspicious and inauspicious

marks of the several gems which are said to make or mar the health and the fortune of the wearer. The wearing of gems with certain merits is highly commended while severe warning is given that gems with certain defects are disastrous and wearning them should be strictly avoided. Hints are given in the works about the evaluation of the gems, based on their hue, lustre, shape, size, weight and place of origin. The expert tester of gems who has a sound and thorough knowledge of Ratna Sastra and evaluates the gems correctly is extolled very highly, while the pseudo-tester who deludes the people by incorrect estimate, with his meagre knowledge, is condemned strongly.

Not only treatises on gems but also those on Tantras and Jyotisa expound the bengin effects of wearing rings and necklaces composed of the nine gems. Each gem has its presiding deity among the nine planets whose movements and transists are believed to direct the destinies of men. By wearing on ones person an ornament with a particular gem, one can enjoy the favourable influence of the relative planet and overcome the adverse effects arising from its unfavourable movement. But a ring set with the nine gems arranged in the prescribed correlation of their positions is said to possess a wonderfully talismanic effect, securing health, prosperity success and longevity for the wearer and is credited with the mystic power of warding off all evil. A section of this book prescribes the method of making such a nine-gem-ring.

A chapter of the book deals with the manner of making artificial gems and the tests for discovering their artificiality. A knowledge of this section will be useful both for producing cheap substitutes for gems when they are purposely required and for guarding oneself against being duped by crafty men who can pass off inferior artificial stones as valuable genuine gems. Such are the more important topics dealt with in this work.

The Sarasvati Mahal Library, Thanjavur possesses eight different manuscripts bearing the title Ratna Pariksa; of which four are complete. The present publication contains the entire text of two of the complete manuscripts. One bearing Burnell No. 2032 / D. No. 1850 and the other bearing Burnell No. 2039 / D. No. 18514. Of these two, the former bears the title स्मृतिसारोद्धारे रत्नपरिक्षा । The colophon to it reads :— इति श्रीमन्नारायणविरचिते स्मृतिसारोद्धारे रत्नपरीक्षाध्यायः समाप्तिमगमत् (Thus end the chapter on Ratna Pariksa in Smrtisaroddhara, composed by Sriman Narayana) Evidently from this, this treatise on gems forms part of a bigger work and that work and that work in turn is only a compilation, either substantially or verbally of many topics pertaining to Smrtis (not only to gems), as can be inferred from the pharse स्मृतिसारोद्धार in its title.

In the latter manuscript the title merely reads बहुग्रन्थसंग्रहात्मक रत्नपरीक्षा making clear from its title, as well as we can see from the matter of its contents, that the work is merely a compilation

from several ancient works. Though no reference to the name of the compiler is found in the title leaf. the colophon introduces him to the reader with the words : ईश्वर दीक्षितीये रत्नपरीक्षा and also suggests the author's work is a comprehensive one, of which Ratna Pariksa is only one of the topics. Unfortunately there is no clue in the manuscript to make any surmise about the exact identity or age of the author. Information on these points and suggestion to make the edition more useful will be acknowledged with due respect and gratitude.

The third complete manuscript bearing Burnell No. 2033/D No. 18508 is a part of Halasya Mahatmyam The colophon explains the context of its occurance thus :- इति स्कान्दपुराणे अगस्त्यसम्हितायां हालास्यमहात्म्ये नवरत्नविक्रयो नाम त्रयोविंशोऽध्यायः । (Thus ends 'Navaratnavikraya;' the 23rd chapter of Halasya Mahatmya. in the Agastya Samhita of Skanda-purana). In this work. Ratna Pariksa is iucluded in the elaborate account of the Puranic episode of how Lord Siva, manifest as Sri Sundaresvara at Madurai. appeared before his devotees as a trader in gems and expounded, incidentally. the treatise on gems. To avoid repetition of ideas already mentioned. only an extract of the third work is given in this publication. selecting only the additional points not, contained in the other two. The fourth complete manuscript and the four other incomplete ones in the Library under the same title have not been taken into account as they contain nothing new and simply repeat. either verbally or in substance. what has already

been mentioned in the other works printed and published in this volume.

Very exhaustive and collated tables of contents, one in Sanskrit and the other in Tamil have been added. a perusal of which will acquaint the readers with the comparative treatment of almost every minute detail about the several gems, dealt wiih in the three works included in this publication.

My thanks are due in an abundant measure to the Honorary Secretaries of Sarasvati Mahal Library, to the former Secretary, Thiru O. A. Narayanaswami Iyer for having entrusted this iuteresting work to me and to Thiru N. Kandaswami Pillai, the present Secretary. whose infections sprit of enthusiasm and energy has spurred me on to continue and complete it.

Thanjavur
1—3—1969

V. GOPALA IYENGAR,
Librarian, EDITOR



## ॥ विषयसूची ॥

[अस्यां सूचिकायां स्मृतिसारोद्धारोक्तरत्नपरीक्षाया विषयानुक्रमणिका प्रधानतया संकलिता । इतरयोर्द्वयोः रत्नपरीक्षाग्रन्थयोः तत्तद्विषय-प्रतिपादकानां पुटानां संख्याः पार्श्वत एव निर्दिष्टाः । अनया रचनया अत्र प्रकाशितेषु त्रिष्वपि ग्रन्थेषु समानविषयप्रतिपादनप्रकारविशेष-परिज्ञानं सुकरं भवेत् ॥]

1, ३१ पुटप्रभृति ३५ पुटपर्यन्तं विद्यमानस्याध्यायस्य मूलकोशानुसारेण "पद्मरागः" इति शीर्षकं कृतम् । तथापि तत्रस्थं आद्यश्लोकचतुष्टयमेव पद्मरागविषयकम् । तच्चातीताध्यायेन योजयित्वा अस्याध्यायस्य "इन्द्र-नीलः" इति शीर्षकविधानमेव समीचीनम् । एषा रीतिरेव अस्यां विषयसूचिकायामवलम्बिता ॥

# பொருளடக்கம்

[ இந்த அட்டவணையில் ஸ்மிருதி ஸாரோத்தாரத்திற் கூறப்பட்ட ரத்தின பரீக்ஷையை முக்கியமாகக்கொண்டு பொருளடக்கம் தொகுக்கப்பட்டுள்ளது. மற்ற இரு ரத்தின பரீக்ஷை நூல்களிலும் அவ்வப்பொருள்களைப் பற்றிக் கூறும் பக்கங்களின் எண்கள் அடுத்தாற்போல் கொடுக்கப்பட்டுள்ளன. இவ்வகைத் தொகுப்பினால் மூன்று நூல்களிலும் ஒரே பொருள் எவ்வாறு கூறப்பட்டுள்ளது. என்பதை ஒப்பு நோக்குவது எளிதாகும். ]

* 31 முதல் 35 பக்கங்கள் வரையிலுள்ள அத்தியாயத்திற்கு முதல் நூலையொட்டி "பதுமராகம்" என்று தலைப்புக் கொடுக்கப் பட்டுள்ளது. ஆயினும் அதிலுள்ள முதல் நான்கு சுலோகங்கள் மட்டுமே பதுமராகத்தைப்பற்றியவை. அவற்றை முந்திய அத்தியாயத்துடன் இணைத்து இவ்வத்தியாயத்திற்கு "இந்திர நீலம்" என்று தலைப்பிடுவதே பொருத்தமாகும். இம்முறையே பொருளடக்கத் தொகுப்பில் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

॥ श्रीगणेशाय नमः ॥

# ॥ स्मृतिसारोद्धारे रत्नपरीक्षा ॥

## ॥ रत्नोत्पत्तिः ॥

अथेदानीं प्रवक्ष्यामि रत्नादीनां परीक्षणम् ।
येषां परीक्षणान्मर्त्यो लोके ख्यातो भविष्यति ॥ १

पृच्छन्ति मुनयस्सर्वे कृताञ्जलिपुटाः स्थिताः ।
मेरौ बदरिकायां तमगस्त्यं मुनिपुङ्गवम् ॥ २

देवदानवगन्धर्वविद्याधरमहोरगाः ।
एतेषां भूषणं भाव्यमन्येषामपि रक्षसाम् ॥ ३

---

# ஸ்மிருதி ஸாரோத்தாரம் - ரத்ன பரீக்ஷை

## ரத்நோத்பத்தி

இனி ரத்னங்களின் பரீக்ஷையைக் கூறுகிறேன். ரத்னங்களின் பரீக்ஷையை அறிந்தவன் உலகில் பிரஸித்தியடைவான்.

மேரு மலையில் பதரிகையில் அகத்திய முனிவர் தவம் புரிந்துவந்தார். முனிவர்கள் அவரிடம் சென்று கைகூப்பி, ஓ முனி சிரேஷ்டரே! தேவர்-தானவர்-கந்தர்வர்-வித்தியாதரர்-உரகர்-அசுரர் முதலியவர்களுக்குக் கிரீடம்-அரை

किरीटे कटिसूत्रे च कुण्डले कण्ठभूषणे ।
कीर्तिवक्त्रे मुद्रिकायां कङ्कणे बाहुभूषणे ॥ ४

इत्यादिभूषणेष्वेषु रत्नसम्मेळनाय च ।
तदुत्पत्तिं परीक्षां च ब्रूहि नो मुनिसत्तम ॥ ५

मुनीनां वचनं श्रुत्वा मुनिश्रेष्ठोऽब्रवीद्वचः ।
उत्पत्तिमाकरं वर्णगुणदोषांस्तथैव च ॥ ६

मौल्यमञ्जलिकं चैव मानकं हस्तसंज्ञया ।
त्रिदिवस्योपकारार्थं वक्तुं समुपचक्रमे ॥ ७

अगस्त्य उवाच —

पुरा पृथिव्या रत्नानि गर्भे सन्तीह (त्वासन्हि) सर्वशः ।
रत्नगर्भेति सा भूमिः ख्याताभूद्भुवनत्रये ॥ ८

---

ஞாண்—குண்டலம்—கண்டாபரணம்—கீர்த்திவக்த்ரம்— கணையாழி—கங்கணம்—தோள்வளை முதலிய ஆபரணங்களில் ரத்னங்களைப் பதிப்பிக்கவேண்டும். ஆகையால், ரத்னங்களின் உத்பத்தியையும் பரீக்ஷையையும் எங்களுக்குச் சொல்லவேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். 2—5

அதைக் கேட்ட அகஸ்திய முனிவர், தேவர்களுக்கு உபகாரத்திற்காக ரத்னங்களின் உத்பத்தி, அவைகள் கிடைக்கும் இடங்கள்; அவைகளின் நிறம், குணம், தோஷம், விலை, எடை போட்டுப்பார்பதற்கு அளவிடும் முறை, எடை, ஹஸ்தஸம்க்ஞை இவைகளைக் கூறலானார். 6—7

முன்பு, ரத்னங்கள் பூமிக்குள் எங்கும் இருந்தன. அதனால் பூமியானது ரத்னகர்பை என்ற பிரஸித்தியை பெற்றிருந்தது. 8

ततो वज्रासुरो नाम बभूवामरसूदनः ।
आक्रान्ता रक्षसा तेन त्रिलोकी वज्रदेहिना ॥ ९

सर्वे देवास्ततो जग्मुः राजधानीं शतक्रतोः ।
वासवं प्रार्थयामासुः प्रोच्चैर्जय जयेति च ॥ १०

देवा ऊचुः –

जय देव महादेव जय त्वं पाकशासन ।
जय वासव देवेन्द्र जय त्वं हि शतक्रतो ॥ ११

जय रुद्र विरूपाक्ष जय शक्र शचीपते ।
वृत्रारे जय दैत्यारे दानवेन्द्र जय प्रभो ॥ १२

नमो नमस्तेऽखिलदेवदेव नमो नमस्ते द्विसहस्रनेत्र ।
देवेन्द्र नस्त्राह्यसुराच्च भीतान् पुनश्च भूयोपि नमो नमस्ते ॥

---

பிறகு, வஜ்ராஸுரன் என்று ஒரு அஸுரன் தோன்றினான். அவன் தேவர்களை அழித்துவந்தான். அவன் வஜ்ரமயமான தேஹம் படைத்திருந்தான். அவன் தனது வலிமையால் மூன்று உலகங்களையும் ஆக்ரமித்துக் கொண்டான். 9

உடனே, தேவர்கள் எல்லோரும் அமராவதிக்குச் சென்று தேவேந்திரனை வேண்டினார்கள். "ஓ தேவர்களுக்குத் தேவனே! பாகாஸுரனை வதைத்தவனே! நீ ஜயம் அடையவேண்டும். வஸுக்களின் தலைவனே! தேவர்களுக்கு அரசனே! வருந்துகிறவர்களைக் காப்பாற்றுகிறவனே! வ்ருத்ராஸுரனைக் கொன்றவனே! அஸுரர்களின் பகைவனே! ஆயிரம் கண்கள் படைத்தவனே!

इति स्तुत्वा महेन्द्रं तं देवाः प्राञ्जलयः स्थिताः ।
स्तुत्याऽनया प्रसन्नोऽभूदिन्द्रः प्रत्यब्रवीत्सुरान् ॥ १४

यदर्थमागता यूयं देवास्त्वग्निपुरोगमाः ।
विदितं भवतां कार्यं साधयिष्यामि तत्सुराः ॥ १५

कापट्येन ततश्शक्रो ब्राह्मणीं तनुमादधे ।
वज्रासुरः स्थितो यत्र तत्रागात्स पुरन्दरः ॥ १६

आयान्तं ब्राह्मणं दृष्ट्वा प्रत्युद्गम्य महासुरः ।
आसनाद्युपचारेण पूजयामास तं द्विजम् ॥ १७

किमर्थमागतं ब्रह्मन्नाज्ञापय महामुने ।
करिष्यामि हि तं तेऽर्थं यत्ते मनसि वर्तते ॥ १८

---

வஜ்ராஸுரனை தாங்கள் ஜயிக்கவேண்டும். வஜ்ராஸுரனை கண்டு நாங்கள் நடுங்குகிறோம். எங்களைக் காப்பாற்ற வேண்டும். 10—13

தேவர்கள் இவ்வாறு வேண்டிக்கொண்டு கைகூப்பி நின்றார்கள். இந்த ஸ்துதியைக் கேட்டு ஸந்தோஷம் அடைந்த இந்திரன். "ஓ அக்னி முதலிய தேவர்களே! நீங்கள் வந்திருக்கும் காரணத்தைத் தெரிந்துகொண்டேன். அக்காரியத்தை ஸாதித்துவிடுகிறேன்" என்று அவர்களை ஸமாதானம் செய்து அனுப்பினான். உடனே இந்திரன் கபடமாக பிராமண வேஷம் பூண்டு வஜ்ராஸுரன் இருக்குமிடத்திற்குச் சென்றான். 14—16

வஜ்ராஸுரன், பிராமணன் வருவதைக்கண்டு எதிர் கொண்டு அழைத்து, அவரை ஆஸனாதி உபசாரங்களால்

वज्रासुर महाभाग यदि मे मनसि स्थितम् ।
दातुमिच्छसि चेद्देहि शरीरं तव सुन्दरम् ॥ १९

ज्ञात्वापि दैत्यस्तन्मायां ददौ तस्मै तनुं प्रियां ।
शस्त्रैरभेद्यं तस्येन्द्रः तद्वज्रेणाहरच्छिरः ॥ २०

शक्रेण निहते दैत्ये तस्मिन्वज्रासुरे ततः ।
दिवि दुन्दुभयो नेदुः ननृतुश्चाप्सरोगणाः ॥ २१

तस्य देहाद्विनिष्क्रान्ताः समस्ता रत्नजातयः ।
तेषां मध्ये मुख्यरत्ने वज्रसंज्ञा कृता सुरैः ॥ २२

---

பூஜித்து, தாங்கள் வந்த காரியம் என்ன? தங்கள் மனதிலிருப்பதைச் சொல்லவேண்டும். தங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்கிறேன் என்றான். உடனே, பிராமண வேஷம் பூண்ட இந்திரன், மஹா பாக்யவானான ஹே வஜ்ராஸுர! நீ எனது விருப்பத்தைப் பூர்த்திசெய்ய விரும்பினால் உன் அழகிய சரீரத்தை எனக்குக் கொடுக்க வேண்டும், என்று கேட்டான். வஜ்ராஸுரன், இது கபடமென்றறிந்தும், தனது சரீரத்தை அவருக்குக் கொடுத்து விட்டான். உடனே, பிராமண வேடம் பூண்டிருந்த இந்திரன், வஜ்ராஸுரனுடைய சிரஸ்ஸைத் தனது வஜ்ராயுததால் துண்டித்தான்.

உடனே தேவர்கள் ஆகாயத்தில் துந்துபி வாத்தியத்தை முழக்கினார்கள், அப்ஸரஸ்ஸுகள் நடனம் செய்தார்கள். அவனது உடலிலிருந்து எல்லாவித ரத்ன ஜாதிகளும் உண்டாயின. தேவர்கள் அவைகளில் சிறந்த ரத்னத்திற்கு வஜ்ரம் என்று பெயரிட்டனர். அவைகளில் தலை, மார்பு இவைகளில் உண்டானவைகள் பிராஹ்மண ஜாதியாம். கைகளில் உண்டானவை க்ஷத்திரிய ஜாதியாம்,

शिरोवक्षोद्गता विप्रा बाहुजाः क्षत्रियाः स्मृताः ।
नाभेर्जातास्तथा वैश्यास्तत्पद्भ्यां शूद्रजातयः ॥ २३

ततो देवोरगैस्सिद्धैर्यक्षराक्षसकिन्नरैः ।
गृहीतं रत्नजालं तत् शिष्टं मर्त्ये प्रकाशितम् ॥ २४

अष्टौ वज्राकराः श्रेष्टा युगच्छन्दानुवर्तिनः ।
द्वौ द्वौ तेष्वनुवर्तेते कृतादिषु यथाक्रमम् ॥ २५

यान्ति चाल्पप्रमाणत्वं युगनाशे विनाशिताः ।
वज्राश्शक्रस्य माहात्म्यादाकरादेवमाकरम् ॥ २६

वज्रस्य मौल्यं यः कुर्याद्गुणं दोषं परीक्ष्य च ।
अश्वमेधाधिको धर्मः तस्य स्यात्तु मुनीश्वराः ॥ २७

---

நாபியிலுண்டானவை வைசிய ஜாதியாம். கால்களில் உண்டானவை சூத்திர ஜாதியாம். 21—23

பிறகு தேவர்கள், உரகர்கள், ஸித்தர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள் ஆகியவர்கள் அந்த ரத்னங்களை எடுத்துச் சென்றனர். அதில் மிகுந்ததே இப்புவியில் பிரகாசப்படுத்தப் பட்டது. இப்புவியில் வஜ்ரம் கிடைக்குமிடங்கள் எட்டு. அவைகளில் கிருதாதி யுகங்கள்தோறும் இரண்டிரண்டு ஆகரங்கள் காணப்படுகின்றன. அவைகள் யுகத்தின் முடிவில் நாசம் செய்யப்பட்டுச் சிறிதாக ஆகின்றன. வஜ்ரங்கள் இந்திரனுடைய பெருமையால் இவ்விதம் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்தில் மாறுகின்றன. வஜ்ரங்களின் குணங்களையும், தோஷங்களையும் பரீக்ஷித்து அதன் விலையை நிர்ணயிப்பவனுக்கு அசுவமேதம் செய்வதைக் காட்டிலும் அதிகமான புண்ணியம் கிடைக்கும். 24—27

यो न वेत्ति गुणं दोषं मौल्यं कुर्यादयुक्तितः ।
तस्य मूर्ध्नि पतेद्वज्रं पर्वतानामिव ध्रुवम् ॥ २८

ब्राह्मणाः क्षत्रिया वैश्याः शूद्राश्चैव चतुर्विधाः ।
स्त्रीपुंनपुंसकाश्चैव त्रिधा ते लिङ्गनिर्णयात् ॥ २९

वज्रादयोपि ये केचित्तेजीवन्तो बृहत्तराः ।
वृत्तास्ते पुरुषा ज्ञेया बिन्दुरेखाविवर्जिताः ॥ ३०

रेखाबिन्दुसमायुक्ताः खण्डशस्ताः स्त्रियः स्मृताः ।
सुतेजसः सत्ववन्तो भूषणे तान्नियोजयेत् ॥ ३१

---

குணமோ, தோஷமோ தெரிந்துகொள்ளாமல் யுக்தி இல்லாமல் வஜ்ரத்தின் விலையை மதித்தால், மலைமீது இடி விழுவது போல அவன் தலையில் இடி விழுவது நிச்சயம். 28

வஜ்ரத்தில் பிராமணஜாதி, க்ஷத்திரியஜாதி, வைச்ய ஜாதி, சூத்ரஜாதி, என்று நான்கு ஜாதிகள். அவைகள் ஒவ்வொன்றிலும் ஸ்திரீஜாதி, புருஷஜாதி, நபும்ஸகஜாதி என்று மூன்று பேதங்கள். 29

வஜ்ராதி ரத்னங்களில் நல்ல ஒளி. பெரிய உருவம், வட்டவடிவம் இவைகள் உள்ளவைகளாகவும், பிந்து ரேகை இல்லாமலிருப்பவைகள் புருஷஜாதிகளாம். 30

கோடுகள், புள்ளிகள் உள்ளவைகளாய்ச் சிறிய உருவமுள்ளவைகள், ஸ்திரீஜாதி ரத்னங்களாம், இவைகளில் நல்ல ஒளியுள்ளவைகள் சிறந்தவைகளாம். அவைகளை ஆபரணங்களில் இழைக்கவேண்டும். 31

த்ராஸம் (கல்லின் உட்புறத்தில் பொரிசல் அல்லது கொப்பளம்), காகபதம், ரேகை, சிறிய உருவம், உடைந்து

त्रासः काकपदं रेखा सौक्ष्म्यं स्फुटितबिन्दवः ।
मालिन्यमपि यस्य स्युः तत्क्लीबं स्यात्कनिष्ठकम् ॥ ३२

पुंलिङ्गं सुमहारत्नं यस्य गेहेऽस्ति सर्वदा ।
तस्य भाग्यवतो भूयाद् पुरुषार्थचतुष्टयम् ॥ ३३

स्त्रीलिङ्गरत्नं मुनयो यस्य कोशेऽस्ति नित्यशः ।
स्त्रीरत्नं च लभेत्तस्य पुत्रपौत्रादिकं फलम् ॥ ३४

क्लीबरत्नं गृहे यस्य वीर्यहानिर्दरिद्रता ।
भवेत्तच्च त्यजेद्धीमान् दुःखशोकभयप्रदम् ॥ ३५

इति रत्नोत्पत्तिः समाप्ता ॥

---

சிதறிய புள்ளிகள், அழுக்கு இவைகளுள்ள கற்கள் நபும்ஸக ஜாதிகளாம். இவைகள் கடைத்தரமானவைகள். 32

பெரியதான புருஷஜாதி ரத்னத்தை வீட்டில் வைத்திருப்பவன் பாக்கியவானாக இருப்பான். நான்குவித புருஷார்த்தங்களையும் அடைவான். 33

ஓ முனிவர்களே! ஸ்திரீ ஜாதி ரத்னங்களைத் தனது பொக்கிஷத்தில் வைத்திருப்பவன் சிறந்த ஸ்திரீயை அடைவான். புத்திரர்களையும், பௌத்திரர்களையும் அடைவான். 34

நபும்ஸக ரத்னங்களை வைத்திருப்பவன் வீரியத்தை இழப்பான். தாரித்திரியத்தை அடைவான். அது துக்கத்தையும் சோகத்தையும் பயத்தையும் கொடுக்கும். ஆகையால் அதை ஒதுக்கிவிடவேண்டும். 35

ரத்நோத்பத்தி முற்றும்

## ॥ अथ गुणदोषौ ॥

रत्नानि धारयेत्कोशे शुद्धानि गुणवन्ति च ।
संभवं च तथा जातिं गुणं तेषां परीक्ष्य च ॥ १

कृते युगे कलिङ्गेषु कोसले वज्रसंभवः ।
हिमालये मतङ्गाद्रौ त्रेतायां कुलिशोद्भवः ॥ २

पौण्ड्रकेषु सुराष्ट्रे च द्वापरे पविसन्ततिः ।
वैराकरे च सोपाने कलौ हीरकसंभवः ॥ ३

गुणाः पञ्च समाख्याता दोषाः पञ्च प्रकीर्तिताः ।
छायाश्चतस्रो विज्ञेया वज्राणां रत्नकोविदैः ॥ ४

---

### குண தோஷங்கள்

ரத்னங்களின் உற்பத்தி, ஜாதி, குணம் இவைகளைப் பரீக்ஷித்துப்பார்த்து அவைகளில் தோஷமில்லாமல் குணம் உள்ள ரத்னங்களைப் பொக்கிஷத்தில் வைத்துக் காப்பாற்ற வேண்டும். 1

கிருதயுகத்தில் கலிங்க தேசத்திலும், கோஸல தேசத்திலும் வஜ்ரம் உண்டாயிற்று. திரேதா யுகத்தில் இமய மலையிலும் மதங்க பர்வதத்திலும் உண்டாயிற்று. துவாபர யுகத்தில் பௌண்டிரகம், ஸௌராஷ்டிரம் இரண்டு இடங்களிலும் உண்டாயிற்று. கலியுகத்தில் வைராக்ரம், ஸோபானம் இரண்டு இடங்களிலும் உண்டாயிற்று. 2—3

வஜ்ரங்களின் குணங்கள் ஐந்து. தோஷங்கள் ஐந்து. சாயை (நிறம்) நான்கு விதம். ரத்ன பரீக்ஷகர்கள் இவைகளைத் தெரிந்துகொள்ளவேண்டும். 4

षट्कोणत्वं लघुत्वं च समाष्टदलता तथा ।
तीक्ष्णाग्रहा (ता ?) निर्मलत्वं इति पञ्च गुणाः स्मृताः ॥ ५

मलो बिन्दुस्तथा रेखा त्रासः काकपदं च यत् ।
एते दोषास्समाख्याताः पञ्च रत्नेषु कोविदैः ॥ ६

श्वेता रक्ता तथा पीता कृष्णा छाया चतुर्विधा ।
विप्रक्षत्रियवैश्यानां शूद्रजातेर्यथाक्रमम् ॥ ७

यज्ञैर्दानैस्तपोभिश्च यदाप्नोति तदाप्नुयात् ।
गुणयुक्तस्य वज्रस्य विप्रजातेर्विधारणात् ॥ ८

जयः पराक्रमस्तस्य शत्रुनाशश्च जायते ।
गुणवत्क्षत्रजातीयं वज्रं वसति यद्गृहे ॥ ९

---

அறுகோணமாக இருத்தல், கனமில்லாமல் இருத்தல், ஸமவடிவமுள்ள எட்டு தளமாக இருத்தல் முனை கூர்மையாக இருத்தல், அழுக்கு இல்லாதிருத்தல் என வஜ்ரத்தின் குணங்கள் ஐந்து. மலம் (அழுக்கு அல்லது மங்கல்), பிந்து (புள்ளி), ரேகை (கோடு), திராஸம் (சிதைவு அல்லது பொரிசல்). காகபதம் (காக்கையின் கால்போன்ற கோடு) என ஐந்து தோஷங்கள். 5—6

வெளுப்பு, சிவப்பு, மஞ்சள், கருப்பு என நான்குவித நிறங்கள். இந்நான்கு நிறங்களும் முறையே பிராம்ஹண, க்ஷத்திரிய, வைச்ய, சூத்ர ஜாதிகள் தரிக்கத்தக்கவைகளாம்.

குணமுள்ள பிராம்ஹண ஜாதி வஜ்ரத்தைத் தரிப்பவன் யக்ஞம், தானம், தபஸ்ஸு இவைகளால் அடையக் கூடிய பலன்களை அடைவான். 8

குணமுள்ள க்ஷத்திரிய ஜாதி வஜ்ரத்தை வீட்டில் வைத்திருப்பவன் ஜயம், பராக்கிரமம், சத்துரு நாசம் இவைகளை அடைவான். 9

कलाकुशलता द्रव्यं प्रजाक्षेमं यशो महत् ।
गुणिनः पवित्रस्नस्य वैश्यजातेर्विधारणात् ॥ १०

परोपकारिता दाक्ष्यं धनधान्यसमृद्धयः ।
गुणयुक्तस्य वज्रस्य शूद्रजातेर्विधारणात् ॥ ११

मले मलिनता ख्याता धारणाद्दंष्ट्रिणो भयम् ।
कोणे व्याधिभयं प्रोक्तं मध्ये न हि भयं भवेत् ॥ १२

दोषेषु बिन्दुरावर्तः परिवर्तें यवाकृतिः ।
चतुर्धैव समाख्याता बिन्दवो वज्रसंस्थिता ॥ १३

---

குணமுள்ள வைச்ய ஜாதி வஜ்ரத்தைத் தரிப்பவன் கலா ஸாமர்த்தியம், பொருட்கள், பிரஜைகளின் க்ஷேமம், புகழ் இவைகளை அடைவான். 10

குணமுள்ள சூத்திர ஜாதி வைரத்தைத் தரித்தால் பரோபகாரம் செய்தல், ஸாமர்த்தியம், தனதானிய ஸமிருத்தி இவைகள் உண்டாகும். 11

மலதோஷமுள்ளது அழுக்கடைந்ததைப்போல ஒளி மங்கி இருக்கும். அதைத் தரித்தால் விஷப்பல் உள்ளவைகளால் (பாம்பு முதலியவைகளால்) பயம் உண்டாகும். ஓரத்தில் அழுக்கு இருந்தால் வியாதியால் பயம் உண்டாகும். அழுக்கு நடுவிலிருந்தால் பயமில்லை. 12

பிந்து (புள்ளி) என்ற தோஷமானது, பிந்து, ஆவர்த்தம், பரிவர்த்தம், யவை என நான்கு வடிவமாகக் கூறப்பட்டிருக்கிறது. 13

रक्तोऽत्र वर्तुलो बिन्दुरावर्तः सव्यवर्तनः ।
रक्तश्च परिवर्तस्तु रक्त एवापसव्यकः ॥ १४

बिन्दुरायुर्धनं हन्यादावर्तो भयमावहेत् ।
परिवर्ते भवेद्व्याधिर्यवे तु फलमुच्यते ॥ १५

स च रक्तस्तथा पीतः श्वेतश्चेति त्रिधा मतः ।
रक्तवर्णयवे ख्यातं गजाश्वानां विनाशनम् ॥ १६

यवः पीतः कुलस्यान्तं धनमायुः सिते भवेत् ।
एवं दोषा गुणाश्चोक्ता यवबिन्दोरशेषतः ॥ १७

---

பிந்து என்பது சிவப்பாகவும், வட்டமாகவும் இருக்கும். ஆவர்த்தம் என்பது சிவப்பாகவும், வட்டமாகவும். வலமாக சுழித்தும் இருக்கும். பரிவர்த்தமென்பது சிவப்பாகவும், வட்டமாகவும், இடமாகச் சுழித்தும் இருக்கும். 14

பிந்து தோஷமானது ஆயுள், தனம் இவைகளை நாசம் செய்துவிடும். ஆவர்த்தம் என்ற தோஷம் பயத்தையுண்டு பண்ணும். பரிவர்த்தம் என்ற தோஷம் வியாதியை உண்டு பண்ணும். இனி யவையின் பயனைக் கூறுகிறேன். 15

யவையானது சிகப்பு, மஞ்சள், வெளுப்பு என மூன்று விதமாம். யவை சிவப்பாக இருந்தால் யானை, குதிரைகள் அழியும். யவை மஞ்சள் நிறமாக இருந்தால் குலத்தையே அழித்துவிடும். யவை வெளுப்பு நிறமாக இருந்தால் தனத்தையும், ஆயுளையும் விருத்தி செய்யும் என யவை (யவை தானியத்தைப் போன்ற உருவம்) என்ற பிந்து (புள்ளி) யின் தோஷங்களும், குணங்களும் முழுமையும் கூறப்பட்டன. 16—17

अथ रेखा —

सव्यवक्त्रा शुभा रेखा वामवक्त्रा भयङ्करी ।
छेदभ्रान्तिकरी छेदा रेखा शास्त्रभयङ्करी ॥ १८

पक्षद्वयप्रदृश्या या छेदगा सा प्रकीर्तिता ।
रेखा बन्धुविनाशाय जायते वज्रसंस्थिता ॥ १९

भिन्नं भ्रान्तिकरं त्रासः सन्त्रासं जनयेत्स्फुटम् ।
अङ्कः काकपदाकारो दृश्यते यः पवौ स्थितः ॥ २०

स मृत्युमादिशत्याशु धनं वा सकलं हरेत् ।
भग्नाग्रं भग्नधारं च दळहीन चतुर्दळम् ॥ २१

---

இனி ரேகையை (ரேகை=கோடு)க் கூறுகிறேன். ஸவ்ய வக்த்ரம் (வலது பக்கத்தில் முகம்) வாம வக்த்ரம் (இடது பக்கத்தில் முகம்), சேதம் (நடுவில் விட்டிருப்பது), ரேகை (நடுவில் விடாமல் தொடர்ச்சியாக இருக்கும் கோடு) சேதகம் (இரு பக்கங்களிலும் முகப்புபோல் காணப்பட்டால் அதற்கு சேதகம் என்று பெயர்.) இவ்விதமாக ரேகா தோஷங்கள் ஐந்து விதமாகும் இவைகளில், வலது பக்கத்தில் முகப்பு உள்ளது சுபமானது. சுபபலனைக் கொடுக்கும். இடது பக்கத்தில் முகப்பு உள்ளது பயத்தை உண்டுபண்ணும். நடுவில் விடுபட்ட கோடு வெட்டுக் காயத்தையும், சித்தப்பிரமையையும் உண்டுபண்ணும். ஸாதாரணமான கோடு ஆயுதத்தால் பயத்தை உண்டு பண்ணும். இருபக்கங்களிலும் முகப்பு அல்லது கத்தரிக்கப் பட்டதுபோல் காணப்படும் "சேதகா" என்ற கோடு காணப்பட்டால் அந்த வஜ்ர ரத்னம் பந்துக்களின் அழிவையுண்டுபண்ணும், *18—19*

कान्तिहीनं च यद्वज्रं दोषाय न गुणाय तत् ।
एवं दोषा गुणाः प्रोक्ता वज्राणां सोमभूभुजा ॥ २२

इति वज्रपरीक्षा संपूर्णा ॥

---

வைரம் உடைந்திருந்தால் சித்தப்பிரமையை உண்டு பண்ணும். திராஸம் (சிதைந்தது போலவோ அல்லது கொப்புளமுள்ளது போலவோ காணப்படுவது) என்ற தோஷம் காணப்பட்டால் மனதுக்கு பயத்தை உண்டு பண்ணும்; நிச்சயம். வஜ்ரத்தில் காக்கையின் காலைப் போல காணப்பட்டால் அந்தக்கபாதமென்ற தோஷம் அதிசீக்கிரத்தில் மரணத்தைக்கொடுக்கும். அல்லது செல்வம் யாவும் அழிந்துவிடும். தலைப்பு உடைந்தது, முனை உடைந்தது, தளமில்லாதது, நான்கு தளமாக உள்ளது. ஒளி இல்லாதது, இவைகள் தோஷத்தை (கெடுதலை) உண்டுபண்ணும். நன்மையை உண்டு பண்ணாது என்று ஸோமபூபாலன் வஜ்ர ரத்னத்தின் தோஷங்களையும் குணங்களையும் கூறியுள்ளார். 20—22

வஜ்ர பரீட்சை முற்றும்



## ॥ अथ मुक्ता ॥

इभाहिघनमत्स्यानां शीर्षे मुक्ताफलोद्भवः ।
त्वक्सारशुक्तिशङ्खानां गर्भान्मुक्ताफलोद्भवः ॥ १

धाराधरेहु जायेत मौक्तिकं जलबिन्दुभिः ।
दुर्लभं तन्महारत्नं देवैस्तन्नीयतेऽम्बरात् ॥ २

गजाहिजं सुदुष्प्रापं मौक्तिकं तपसा विना ।
मौक्तिकं शुक्तिजं लभ्यमाकरेषु कलौ नृभिः ॥ ३

कुक्कुटाण्डसमं वृत्तं मौक्तिकं निबिडं गुरु ।
घनजं भानुसंकाशं देवयोग्यममानुषम् ॥ ४

---

### முத்துக்களின் பரீக்ஷை

யானை, பாம்பு, மேகம், மத்ஸ்யம் இவைகளின் தலையில் முத்துக்கள் உண்டாகின்றன. மூங்கில், சிப்பி, சங்கு இவைகளின் கர்ப்பத்தில் முத்துக்கள் உண்டாகின்றன. மேகங்களில் ஜலபிந்துக்கள் விழுந்து அவைகள் முத்துக்களாக ஆகின்றன. இந்த முத்துக்களை தேவர்கள் ஆகாசத்திலேயே எடுத்துச்சென்று விடுகிறார்கள். ஆகையால் இவைகள் கிடைப்பது அரிது. 1—2

யானை பாம்பு இவைகளின் தலையில் உண்டாகும் முத்துக்கள் தவம் செய்யாதவர்களுக்குக் கிடைப்பதரிது. இக்கலியில் சிப்பிகளில் உண்டாகும் முத்துக்கள் ரத்னாகரங்களில் (ஸமுத்திரத்தில்) மனிதர்களுக்குக் கிடைக்கக் கூடியவைகள். மேகத்தில் உண்டாகும் முத்தானது கோழி முட்டையைப்போலவும், வட்டவடிவமாகவும், அழுத்தமாகவும் கனமாகவும் சூரிய ஒளியைப்போல் மிகவும்

काम्भोजकुम्भिसंभूतं धात्रीफलनिभं समम् ।
आताम्रपिञ्जरच्छायं मौक्तिकं मन्ददीधिति ॥ ५

फणिजं वर्तुलं रम्यं नीलच्छायां महाद्युति ।
पुण्यहीना न पश्यन्ति वासुकेः कुलसंभवम् ॥ ६

कोलकं कोलसदृशं तद्दंष्ट्रासदृशच्छवि ।
अलभ्यं मनुजैः रत्नं मौक्तिकं पुण्यवर्जितैः ॥ ७

गुञ्जाफलसमस्थौल्यं तिमिजं मौक्तिकं लघु ।
पाटलीपुष्पसदृशं मन्दजा(त्यो) सुवर्तुलम् ॥ ८

---

பிரகாசமுள்ளதாகவும் இருக்கும். இது தேவர்கள் தரிக்கத் தக்கது. மனிதர்களுக்குக் கிடைப்பது அரிது. 3—4

காம்போஜ தேசத்திய கஜத்தின் மஸ்தகத்தில் உண்டாகும் முத்துக்கள் நெல்லிக்கனியைப்போன்ற உருவம், காத்திரம், ஓரங்களில் சிவப்பான மஞ்சள் நிறம், மங்கலான பிரகாசம் இவைகளுள்ளதாக இருக்கும். 5

ஸர்ப்பத்தின் தலையில் உண்டாகும் (நாகரத்னம் எனப்படும்) முத்தானது வட்ட வடிவமாகவும், மிக ரமணீயமாகவும், நீல நிறமாகவும், மிகுந்த ஒளியுள்ளதாகவும் இருக்கும். வாஸுகியின் குலத்தில் உண்டாகும் இந்த ரத்னத்தைப் புண்ணியம் செய்யாதவர்கள் கண்ணாலும் பார்க்கமுடியாது. 6

காட்டுப்பன்றியின் தலையில் உண்டாகும் முத்து பன்றியைப்போன்ற வடிவமும், அதன் பல்லின் ஒளியும் உடையதாக இருக்கும். இது புண்ணியம் செய்யாதவர்களுக்குக் கிடைப்பதரிது. 7

திமி என்ற மத்ஸ்ய விசேஷத்தின் தலையிலுண்டாகும் முத்தானது குன்றிமணியின் காத்திரமுள்ளதாகவும்

वंशजं शशिसङ्काशं कङ्कोलीफलमात्रकम् ।
प्राप्यते बहुभिः पुण्यैः तद्रक्ष्यं वेदमन्त्रतः ॥ ९

वर्षोपलसमं दीप्त्या पाञ्चजन्यकुलोद्भवम् ।
कपोताण्डप्रमाणं तत् कान्तं पापहरं शुभम् ॥ १०

शुक्तिजं त्वम्बुधेर्मध्ये सिंहले चारवाटके ।
पारसीके बर्वरे च भवेन्मुक्ताफलं शुभम् ॥ ११

स्वात्यां स्थिते रवौ मेघैर्ये मुक्ता जलबिन्दवः ।
ते शीर्णाः शुक्तिभिर्मुक्ताः (पीताः) जायन्ते निर्मलत्विषः ॥

---

லேசாகவும் இருக்கும். (நிறத்தில்) பாதிரிப்பூவைப் போலவும் ஒளிகுன்றியும் நல்ல வட்டவடிவமாயும் இருக்கும்.

மூங்கிலில் உண்டானது சந்திரனைப்போன்ற பிரகாச முடையது. கங்கோலப்பழத்தின் (வால்மிளகின்) அளவுள்ள தாகவும் இருக்கும். இது வெகுவாக புண்ணியம் செய்தவர் களுக்குத்தான் கிடைக்கும். இதை வேத மந்திரங்களால் ரக்ஷை செய்து காப்பாற்றவேண்டும். சங்குகளில் உண்டாகும் முத்துக்கள் ஆலங்கட்டியின் நிறம், புறா முட்டையின் காத்திரம், நல்ல ஒளி இவைகளையுடையதாம். இது சிறந்தது. பாபங்களைப் போக்கும். 9—10

சிப்பியிலுண்டாகும் முத்தானது சிங்களம், ஆரவாடம், பாரஸீகம், பர்பரம் இந்த இடங்களில் ஸமுத்திர மத்தியில் உண்டாகிறது. ஸ்வாதியில் சூரியன் ஸஞ்சரிக்கையில் மேகத்திலிருந்து விழும் ஜலபிந்துக்கள் சிதறி அவைகளை சிப்பிகள் உட்கொள்ளுவதால் இந்த முத்து உண்டாகிறது. இது மங்கலாக இல்லாமல் ஒளியுள்ளதாக இருக்கும். இது சிறந்தது. 11—12

स्थूला मध्यास्तथा सूक्ष्माः बिन्दुमानानुसारतः ।
भवन्ति मुक्तास्तासां च मौल्यं तन्मानरूप्यतः ॥ १३

रूक्मिण्याख्या भवेच्छुक्तिः तस्यां जातं प्रमौक्तिकम् ।
निर्मलं कुङ्कुमच्छायं जातीफलसमं वरम् ॥ १४

अमौल्यं तद्विनिर्दिष्टं रत्नलक्षणकोविदैः ।
दुर्लभं नृपयोग्यं तत् स्वल्पभाग्यैर्न लभ्यते ॥ १५

सुस्निग्धं मधुरच्छायं मौक्तिकं सिंहलोद्भवम् ।
आरवाटसमुद्भूतं पीतच्छायं सुनिर्मलम् ॥ १६

---

சிப்பியில் உண்டாகும் முத்துக்கள் மேகஜல பிந்துக்களின் அளவை அனுசரித்து பெரிதாகவும், நடுத்தரமாயும், சிறியதாகவும் இருக்கும். இவைகளின் விலை இவைகளின் காத்திரத்தைப் பொருத்ததேயாம். 13

ருக்மிணி என்ற சிப்பியில் உண்டாகும் முத்துக்கு ப்ரமௌக்திகம் (சிறந்த முத்து) என்று பெயர். இது சுத்தமாகவும். குங்கும நிறமுள்ளதாகவும், ஜாதிக்காயின் காத்திரமுள்ளதாகவும் இருக்கும். இது மிகச் சிறந்தது. ரத்ன பரீக்ஷையில் கைதேர்ந்தவர்கள் இதற்கு விலை மதிப்பே கிடையாது என்று கூறுகின்றனர். இது கிடைப்பதரிது. இது அரசர்கள் தரிக்கத்தக்கது. ஸ்வல்ப பாக்கியம் செய்தவர்களுக்குக் கிடைக்காது. 14—15

சிம்ஹளத்தில் உண்டான முத்தானது வழவழப்பும், இனிமையான நிறமும் உள்ளது.

ஆரவாடத்தில் உண்டான முத்து மஞ்சள் நிறமாகவும், சுத்தமாகவும் இருக்கும். 16

पारसीकोद्भवं स्वच्छं सितं मुक्ताफलं शुभम् ।
ईषत्श्यामं च रूक्षं च मौक्तिकं बर्बरोद्भवम् ॥ १७

चत्वारः स्युर्महादोषाः षण्मध्याः परिकीर्तिताः ।
एवं दश समाख्यातास्तेषां वक्ष्यामि लक्षणम् ॥ १८

यत्रैकदेशसंलग्नं शुक्तिखण्डो विभाव्यते ।
शुक्तिलग्नः समाख्यातः स दोषः कुष्ठकारकः ॥ १९

मीनलोचनसंकाशो दृश्यते मौक्तिके तु यः ।
मत्स्याक्षस्स तु दोषः स्यात्पुत्रनाशकरो ध्रुवम् ॥ २०

---

பாரஸீகத்தில் உண்டான முத்து நிர்மலமாகவும், வெண்மையாகவும் இருக்கும். இது சிலாக்கியமானதாம். பர்பர தேசத்திலுண்டாகும் முத்தானது சிறிது பசுமையாகவும், பளபளப்பு இல்லாமலும் இருக்கும். 17

முத்துக்களின் மஹா தோஷங்கள் நான்கு. நடுத்தரமான தோஷங்கள் ஆறு. ஆகப்பத்து தோஷங்களின் இலக்ஷணத்தைக் கூறுகிறேன். 18

முத்தின் ஒரு பக்கத்தில் சிப்பி ஒட்டிக்கொண்டிருக்கும். இதற்கு சுக்தி லக்கினம் (சிப்பி சேர்ந்தது) என்று பெயர். இந்த தோஷமுள்ளது குஷ்டரோகத்தை உண்டுபண்ணும்.

முத்தில் மீன் கண்போலக் காணப்படும். இந்த தோஷத்திற்கு மத்ஸ்யாக்ஷம் (மீன் கண்) என்று பெயர். இது நிச்சயமாக புத்திர நாசத்தை உண்டுபண்ணும். 20

दीप्तिहीनं गतच्छायं जरठं तद्विदुर्बुधाः ।
दारिद्र्यजननं यस्मात्तस्मात्तत्परिवर्जयेत् ॥ २१

मौक्तिकं विद्रुमच्छायमतिरक्तं विदुर्बुधाः ।
तस्मिन् मन्धारिते मृत्युर्जायते नात्र संशयः ॥ २२

उपर्युपरि तिष्ठन्ति वलयो यत्र मौक्तिके ।
त्रिवृतं नाम तत्ख्यातं दुर्भगत्वविधायकम् ॥ २३

अवृत्तच(व)लनं यत्तु चर्पटं तन्निगद्यते ।
मौक्तिकं ध्रियते येन तस्याकीर्तिर्भवेत्सदा ॥ २४

त्रिकोणं तु समाख्यातं सौभाग्यक्षयकारकम् ।
दीर्घं यत्तु कृशं प्रोक्तं यशोविध्वंसकारकम् ॥ २५

---

ஒளியின்றி நிறம் குன்றிய முத்துக்கு ஜரடம் (கிழடு நாட்பட்டு உருக்குலைந்தது) என்று பெயர். இது தாரித்திரியத்தையுண்டுபண்ணும். ஆகையால் இதை நீக்கிவிடவேண்டும். 21

பவழ நிறமுள்ள முத்துக்கு அதிரக்தம் என்று பெயர். அதைத் தரித்துக்கொண்டால் மரணமடைவான். ஸந்தேகமே இல்லை 22

முகத்தில் ஒன்றுக்கு மேலொன்றாக(மூன்று) வளையங்களிருக்கும். இந்த தோஷத்திற்கு திருவிருதம் என்று பெயர். இதைத் தரிப்பவன் எல்லா பாக்கியங்களையும் இழந்துவிடுவான். 23

முத்தில் வட்டமாக இல்லாமல் சுழிகளிருந்தால் அந்த தோஷத்திற்கு சர்படம் என்று பெயர். இதைத் தரிப்பவனுக்கு எப்பொழுதும் அபகீர்த்தி உண்டாகும். 24

முக்கோண வடிவமான முத்து ஸௌபாக்கியத்தை அழித்துவிடும்.

निर्भुग्नमेकतो यत्तु कुशदाश्वं तदुच्यते ।
सदोषं मौक्तिकं नित्यं निरुद्योगकरं हि तत् ॥ २६

अवृत्तं पीठकोपेतं खण्डसंभिन्नरूपितम् ।
अरम्यं गुणहीनं च स्वल्पमौल्यं हि मौक्तिकम् ॥ २७

तारकाद्युतिसङ्काशं सुतारं तन्निगद्यते ।
सुवृत्तं मौक्तिकं यत्स्याद्गुणवत्तत्प्रकीर्त्यते ॥ २८

---

நீண்டு (காத்திரமாக இல்லாமல்) இருக்கும் முத்துக்கு க்ருசம் (சிம்பியது) என்று பெயர். இது புகழை அழித்து விடும். 25

ஒரு பக்கத்தில் ஒடுக்கு விழுந்ததற்கு க்ருசபார்ச்வம் (பக்கத்தில் ஒடுக்கு விழுந்தது) என்று பெயர். இந்த தோஷம் உத்தியோகமற்றவனாகச் செய்துவிடும். 26

வட்ட வடிவமாக இல்லாதது, பீடமுள்ளது (அடிப் பக்கத்தில் பீடம்போல் மட்டமாக இருப்பது அதாவது ஸம தரையில் வைத்தால் உருண்டு ஓடாமல் பலகையைப்போல் வைத்த இடத்திலேயே அசையாமலிருக்கும்படி அகன்று இருப்பது), உடைந்தது, விரிசலுள்ளது, சுறுக்குமுள்ளது, பார்வைக்கு ரமணீயமாக இல்லாதது, நல்லகுணமில்லாதது இந்த முத்துக்கள் குறைந்த விலையுள்ளவைகளாகும். 27

நக்ஷத்திரத்தின் ஒளியைப்போன்ற ஒளியுடைய முத்துக்கு "ஸுதாரம்" என்று பெயர்.

நல்ல வட்ட வடிவமான (உருண்டை வடிவமான) முத்துக்கு "குணவத்" என்று பெயர். 28

தோஷமில்லாமல் இருப்பதுடன், நல்ல ஒளிவீசும் முத்துக்கு "நிர்மலம்" என்று பெயர்.

स्वच्छं दोषविनिर्मुक्तं निर्मलं मौक्तिकं मतम् ।
गुरुत्वं तोलने यस्य शशिबिम्बसमं च यत् ॥ २९

वृत्तं रेखाविहीनं तत् स्निग्धमस्फुटितं शुभम् ।
इति सर्वगुणोपेतं मौक्तिकं येन दार्यते ॥ ३०

तस्यायुर्वर्धने लक्ष्मीः सर्वपापं प्रणश्यति ।
चतुर्धा मौक्तिकच्छाया पीता च मधुरा सिता ॥ ३१

नीला चेति समाख्याता रत्नतत्त्वपरीक्षकैः ।
पीता लक्ष्मीप्रदा ज्ञेया मधुरा बुद्धिवर्धिनी ॥ ३२

---

எடையில் அதிகப்பளுவும் சந்திரபிம்பம் போன்றும் வட்டவடிவமும், கோடு, விரிசல், ஒடைசல் இல்லாமலும் இருக்கும் முத்துக்கு "ஸ்நிக்தம்" (மனோஹரம் அல்லது பளபளப்பு) என்று பெயர்.

இத்தகைய ஸகலவிதமான குணங்களுடன் கூடிய முத்தைத் தரிப்பவனுக்கு ஆயுள் விருத்தியடையும், செல்வம் விருத்தியடையும். ஸகல பாபங்களும் நசிக்கும். 29—31

முத்துக்களுக்கு மஞ்சள் - மதுரம் - வெளுப்பு - நீலம் என்று சாயை (நிறம்) நான்குவிதம் என ரத்ன தத்துவத்தைப் பரீக்ஷித்துப் பார்ப்பவர்கள் கூறுகின்றனர்.

மஞ்சள் நிறமான முத்து செல்வத்தைக் கொடுக்கும்.

மதுர (மதுவையொத்த) நிறமுள்ள முத்து புத்தியை விருத்தி செய்யும். 32

வெண்மை நிறமுள்ள முத்து புகழைக்கொடுக்கும்.

நீல நிறமுள்ள முத்து ஸௌபாக்கியத்தை நாசம் செய்துவிடும்.

सिता यशस्करीच्छाया नीला सौभाग्यनाशिनी ।
माञ्जलिः प्रोच्यते गुञ्जा तास्तिस्रो रूपकं भवेत् ॥ ३३

रूपकैर्दशभिः प्रोक्तः कळञ्जो नाम नामतः ।

मानम् —

कांस्यपात्रद्वयं वृत्तं समानं रूपमानतः ॥ ३४

चतुश्छिद्रसमायुक्तं प्रत्येकं रज्जुयन्त्रितम् ।
दण्डः कांस्यमयः श्लक्ष्णः द्वादशांगुलिसंमितः ॥ ३५

अंशद्वयसमानश्च प्रान्तयोर्मुद्रिकायुतः ।
मध्ये तस्य प्रकर्तव्यः कण्टकः कांस्यनिर्मितः ॥ ३६

पञ्चांगुलात्ततस्तस्य मूलछिद्रं प्रकल्पयेत् ।
निवेश्या छिद्रदेशेऽस्य शलाकाङ्गुलिमात्रका ॥ ३७

---

ஒரு குன்றிமணி இடைக்கு மாஞ்சலி என்று பெயர். மூன்று குன்றிமணி இடைக்கு ரூபகம் (பணவிடை) என்று பெயர். பத்துப் பணவிடை கொண்டது ஒரு களஞ்சம் (கழஞ்சு) என்று பெயர்.

எடை :—

ஸம எடையுள்ள வட்டமான இரண்டு வெண்கலத் தட்டுகளில் நான்கு துவாரங்கள் செய்து அவைகளில் கயிறு களைக் கட்டவேண்டும்.

கரடு முரடு இல்லாமல் 12 அங்குலம் நீளமுள்ள வெண்கலக்கோலின் நடுமத்தியில் வெண்கலத்தால் முள் வைத்து. அதன் அடியில் துவாரம் செய்து. கைப்பிடியின் இரண்டு பக்கத்திலுமுள்ள தோரணங்களையும் முள்ளின் இரண்டு பக்கங்களிலும் பொருந்தவைத்து இணைக்க

शलाके प्रान्तयोस्तस्य कीलयेत्तोरणाकृती ।
तोरणस्य शिरोमध्ये कर्तव्या लघुमण्डली ॥ ३८

तत्र रज्जुं निबध्नीयात् तां दृष्ट्वा तोलयेत्सुधीः ।
कलञ्जमानकं द्रव्यमेकदेशे निवेशयेत् ॥ ३९

अन्यतो जलबिन्दुं च तोलनार्थं विनिक्षिपेत् ।
कण्टके तु समे जाते तोरणस्य च मध्यगे ॥ ४०

तदा समं विजानीयात् तोलनं नाम कोविदः ।
चत्वारि त्रीणि युग्मं वा तथैकं वा तुलास्थितम् ॥ ४२

समं कलञ्जमानेन तच्छ्रेष्ठं स्यात्तथोत्तरम् ।
नवमात्पञ्चमं यावत् कलञ्जेन समं तु तत् ॥ ४२

---

வேண்டும். முள்ளின் இரு பக்கங்களிலும் 5 அங்குலம் விட்டு துவாரம் செய்து. தராசின் கயிறுகளை அதில் முடிய வேண்டும். (அப்பொழுது முள்ளு ஸமமாக நிற்கவேண்டும்) கைப்பிடியில் மேல் பக்கத்தில் கயிற்றைக் கட்டித் தூக்கி முள்ளைப் பார்த்து எடை போடவேண்டும்.

ஒரு தட்டில் எடைப்போட்டு மற்றொரு தட்டில் நீர்ச் சொட்டுகளை விட்டுவர, முள்ளு நடுநிலையில் நின்றால் எடை ஸமமாகும்.

ஒரு கழஞ்சுக்கு 4. 3. 2 அல்லது 1 என்ற நிலையில் நின்றால், அந்த முத்துக்கள் "ஶ்ரேஷ்டம்" மிகச்சிறந்தவை கள் எனப்படும், அவைகளிலும் அதிக எடை நிற்கும் முத்து மிகச் சிறந்ததாகும்.

ஒரு கழஞ்சு எடைக்கு 9 முதல் 5 முத்துக்கள் வரையில் நின்றால் அவைகள் "உத்தமம்" (உயர்தர முத்துக்கள்) எனப்படும். 42

तत्क्रमादुत्तमं ज्ञेयं मौक्तिकं रत्नकोविदैः ।
चतुर्दशात्समारभ्य दशसंख्यावधिक्रमात् ॥ ४३

कलञ्जस्य समानत्वात् मौक्तिकं मध्यमं स्मृतम् ।
आरभ्य विंशतिं यावत् क्रमात्पञ्चदशावधि ॥ ४४

लघ्व्यस्ताः कथिता मुक्ताः मौल्यं च तदनुक्रमात् ।
अतः परं च सूक्ष्माणि मौक्तिकानि प्रचक्षते ॥ ४५

तोलने क्रम एष स्याद् मूल्ये वाऽपि निरूपितः ।
सूक्ष्माणां स्वल्पकं मौल्यं लघूनां लघुमूल्यकम् ॥ ४६

मध्यानां मध्यमं मूल्यं गुरूणां गुरुमूल्यता ।
कलञ्जद्वयमानेन यद्येकं मौक्तिकं भवेत् ॥ ४७

---

ஒரு கழஞ்சு எடைக்கு 14 முதல் 10 முத்துக்கள் வரையில் நின்றால் அவைகள் "மத்யமம்" (நடுத்தர முத்துக்கள்) எனப்படும்

ஒரு கழஞ்சு எடைக்கு 20 முதல் 15 முத்துக்கள் வரையில் நின்றால் அவைகள் "லகு" (இலகு முத்துக்கள்) எனப்படும். இவைகளின் விலை அவைகளின் எடையை அனுசரித்ததேயாம்.

இவைகளைக் காட்டிலும் சிறிய முத்துக்களும் உண்டு. முத்துக்களை எடைபோடும் முறையும், விலை மதிப்புப் போடும் விதமும் இவ்வாறு கூறப்பட்டன.

ஸன்ன முத்துக்களுக்கு விலைமிகவும் குறைவு. லகு முத்துக்களுக்கு இலகுவான விலைதான். நடுத்தர முத்துக் களுக்கு நடுத்தர விலைதான். அதிக எடையுள்ள முத்துக் களுக்கு விலை அதிகம்.

न धार्यं नरनाथैस्तत् देवयोग्यमनुत्तमम् ।
उत्पत्तिराकराद्यायाः (श्च) गुणदोषाः शुभाशुभाः ।
तोलनं मौल्यविन्यासः कथितास्सोमभूभुजा ॥ ४८

इति मुक्ताः ॥

---

ஒரு முத்து இரண்டு கழஞ்சு எடை இருந்தால், அது தேவார்ஹமானது. மிகமிகச் சிறந்தது. அதை அரசனும் தரிக்கலாகாது.

முத்துக்கள் உண்டாகும் இடங்கள், கிடைக்கும் இடங்கள், குணங்கள், தோஷங்கள், நல்ல பலன்கள். எடை போடுதல், அவைகளின் விலை, இவைகளை இவ்விதம் ஸோம பூபாலன் கூறியிருக்கிறார்.

முத்துக்கள் முற்றும்



## ॥ अथ माणिक्यम् ॥

सिन्धौ रावणगङ्गायां सिंहळे जन्म कीर्तितम् ।
क्षेत्राणि तत्र चत्वारि माणिक्यस्य जगुर्बुधाः ॥ १

सिंहळं प्रथमं क्षेत्रं तथा कालापुरं परम् ।
अ(आ)न्ध्रं तृतीयमादिष्टं चतुर्थं तुम्बरं स्मृतम् ॥ २

अशोकपल्लवच्छायं अ(आ)न्ध्रे सौगन्धिकं विदुः ।
तुम्बुरू(रं) छायया नीलं नीलगन्धि प्रकीर्तितम् ॥ ३

---

## மாணிக்க பரிக்ஷை

மாணிக்கமானது ஸிந்து, ராவண கங்கை, சிங்களம் இவைகளில் உண்டாகின்றது.

மாணிக்கம் நான்கு இடங்களில் உண்டாகின்றது என்று அறிவாளிகள் கூறுகின்றனர். 1

அவைகளில் சிங்களம் முதலாவது இடம். காலாபுரம் இரண்டாவது இடம். அ(ஆ)ந்திரம் மூன்றாவது இடம். தும்பரம் நான்காவது இடம். 2

அ(ஆ)ந்திர தேசத்தில் உண்டாகும் மாணிக்கம் அசோகத்தளிர் நிறமுள்ளது. இதற்கு "ஸௌகந்திகம்" என்று பெயர்.

தும்புரத்தில் உண்டாவது நீலநிறமுள்ளதாம். இதற்கு "நீலகந்தி" என்று பெயர். 3

சிங்களத்தில் உண்டாவது சிகப்பு நிறமாக இருக்கும். இதற்கு "பத்மராகம்" என்று பெயர்.

सिंहले तु भवेद्रक्तं पद्मरागमनुत्तमम् ।
पीतं कालपुरोद्भूतं कुरुविन्दमिति स्मृतम् ॥ ४

उत्तमं सिंहलोद्भूतं निकृष्टं तुम्बुरोद्भवम् ।
मध्ययोर्मध्यमं ज्ञेयं माणिक्यं क्षेत्रभेदतः ॥ ५

माणिक्यस्य समाख्याताः अष्टौ भेदा मुनीश्वरैः ।
गुणाश्चत्वार आख्याताः छायाः षोडश कीर्तिताः ॥ ६

छायाद्वितयसंबद्धं द्विछायं बन्धुनाशनम् ।
द्विरूपं द्विपदं तेन मासैकेन पराभवः ॥ ७

---

காலாபுரத்தில் உண்டாவது மஞ்சள் நிறமாக இருக்கும். இதற்கு "குருவிந்தம்" என்று பெயர். 4

இவைகளில் சிங்களத்தில் உண்டாவது சிறந்தது. தும்புரத்தில் உண்டாவது கடைத்தரமானது. மற்ற இரு இடங்களிலும் உண்டாவது நடுத்தரமானது. இவைகள் இடங்களின் வேற்றுமையாலுண்டாகும் குணபேதங்களாம்.

மாணிக்கம் எட்டுவிதமென்று முனிவர்கள் கூறுகின்றனர். அவைகளின் நல்ல குணங்கள் நான்கு சாயை (நிறம்) பதினாறுவிதமாம். 6

இரண்டுவிதமான நிறம் கலந்திருந்தால் அதற்கு "துவிச்சாயம்" (இரண்டுவித நிறம் கலந்தது) என்று பெயர். இந்த தோஷம் பந்துக்களை வதைக்கும்.

ஒரே கல்லில் இரண்டு உருவம் காணப்பட்டால் அதற்கு "துவிபதம்" என்று பெயர். இந்த தோஷம் ஒரு மாத காலத்திற்குள் அவமானத்தை உண்டுபண்ணும். 7

உடைந்திருந்தால் அதற்கு "பின்னம்" என்று பெயர். இந்த தோஷம் ஆயுதங்களால் சாக்தறச் செய்யும்.

संभेदं भिन्नमित्युक्तं शस्त्रघातविधायकम् ।
कर्करं शर्करायुक्तं पशुबन्धुविनाशनम् ॥ ८

दुग्धलिप्तसमं यत्तु लशुनापदमुच्यते ।
अशोभन तदुद्दिष्टं माणिक्यं मणिकोविदैः ॥ ९

मधुबिन्दुसमच्छायं कामलं परिकीर्तितम् ।
आयुर्लक्ष्मीं जयं हन्ति सदोषं तन्न धारयेत् ॥ १०

रागहीनं जडं प्रोक्तं धनधान्यापवादकृत् ।
धूम्रं धूम्र(म)समाकारं वैद्युतं भयमावहेत् ॥ ११

---

மணல் கலந்திருந்தால் அதற்கு "கர்கரம்" என்று பெயர். இந்த தோஷம் பசுக்களையும், சுற்றத்தாரையும் அழித்துவிடும். 8

கல்லில் பால் படிந்தது போல் காணப்பட்டால் அதற்கு "லசுநாபதம்" என்று பெயர் இந்த தோஷம் அமங்கள கரமென்று ரத்ன பரீக்ஷை தெரிந்தவர்கள் கூறுகின்றனர். 9

தேன் சொட்டின் நிறமுடையதற்கு "காமலம்" என்று பெயர். இந்த தோஷம் ஆயுள், செல்வம், ஜயம் இவைகளை ஒழித்துவிடும். ஆகவே இதைத் தரிக்கலாகாது. 10

சிகப்பு நிறமாக இல்லாததற்கு "ஜடம்" என்று பெயர். இது தன, தான்யங்களை நாசம் செய்துவிடும், புகை நிறமாக இருப்பதற்கு "தூம்ரம்" என்று பெயர். இந்த தோஷம் இடியினால் பயத்தையுண்டுபண்ணும். 11

இத்தகைய (எட்டுவித) தோஷமுள்ள மாணிக்கங்கள் நிந்திக்கத்தக்கவைகளாம். இவைகளுக்கு விலையே கிடையாது.

ईदृग्दोषयुता निन्द्याः मणयो मूल्यवर्जिताः ।
अपि प्राप्य न ते धार्याः गृहे शोभनमिच्छता ॥ १२

माणिक्यस्य गुणाः प्रोक्ताः चत्वारो मुनिपुङ्गवाः ।
स्निग्धच्छाया गुरुत्वं च नैर्मल्यमतिरक्तता ॥ २३

इति माणिक्यम् ॥

---

இந்த தோஷமுள்ளவைகள் ஒரு சமயம் கையில் கிடைத்தாலும் வீட்டில் சுபசோபனங்களை விரும்புகிறவன் அதைத் தரிக்கலாகாது. 12

ஓ முனிவர்களே! மனதைக் கவரும் பளபளப்பு (ஒளி), கனமாக இருத்தல், மங்கலாக இல்லாமை, நல்ல சிகப்பு நிறம் ஆகிய நான்கு குணங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

மாணிக்கம் முற்றும்.



## ॥ अथ पद्मरागः ॥

सर्वलक्षणसंपन्ने पद्मरागे गृहे स्थिते ।
अश्वमेधफलं तस्य वित्तमायुर्धनं भवेत् ॥ १

छाया या पद्मरागस्य रक्ता कोकनदप्रभा ।
छायास्तु कुरुविन्दस्य चत्वारः परिकीर्तिताः ॥ २

अच्छक्षीरसमभा (समाभासा) कुङ्कुमोदकसन्निभा ।
ईषद्रक्ता भवेच्छाया सौगन्धिकमणेरियम् ॥ ३

नीलोत्पलदळप्रख्या लोहाग्निविट्समप्रभा ।
नीलगन्धमणौ प्रोक्ते छाये द्वे मणिकोविदैः ॥ ४

---

## பத்மராக பரிக்ஷை

ஸகல லக்ஷணங்களுடன் கூடிய பத்மராகமணி வீட்டில் இருந்தால் அசுவமேதம் செய்த பலன், செல்வம், ஆயுள் இவைகள் உண்டாகும். *1*

சிகப்பும், செந்தாமரையின் நிறமும் பத்மராகத்தின் நிறங்களாம்.

வெளுப்பு, பாலின் நிறம், குங்கும ஜலத்தின் நிறம், சிறிது சிவப்பான நிறம் இந்நான்கும் குருவிந்த மணியின் நிறங்களாம்.

சிறிது சிவப்பான மணிக்கு "ஸௌகந்திகம்" என்று பெயர். *2—3*

நீலோத்பலத்தின் இதழ் போன்ற நிறம், லோகாக்னி விட் என்னும் கிட்டமின் நிறம் (லோகாக்னிவிட் என்பது

इन्द्रनीलस्य संभूतिः सिंहलद्वीपमध्यतः ।
नद्या रावणगङ्गायाः कूले पद्माकरे कुरौ ॥ ५

सितच्छाया भवेद्विप्रः ताम्रः क्षत्रियजातिकः ।
पीतस्तु वैश्यजातीयः वृषलः कृष्णदीधितिः ॥ ६

दोषांश्चास्य प्रवक्ष्यामि नामभिर्लक्षणैश्च षट् ।
गुणांश्च कथयिष्यामि पञ्चधाऽष्टविधा छविः ॥ ७

अभ्रवत् पटलं यस्य तदभ्रकमिति स्मृतम् ।
धारणे तस्य संपत्तिः आयुश्चैव विनश्यति ॥ ८

---

இரும்மைக் காய்ச்சும்பொழுது இரும்பின் பாகங்கள் உலையில் விழுந்து அது கட்டியாக ஆகும். இதற்கு ப்லாகாக்னிகிட் என்று பெயர். இதற்குக் கிட்டான் என்றும் பெயர். இவ்விரண்டுவித நிறங்களையும் உடைய மணிக்கு நீலகந்திமணி என்று பெயர். 4

சிங்களத்தீவின் மத்திய பாகம், ராவண கங்கா நதிக்கரை, பத்மராகம், குருக்ஷேத்திரம் இந்த இடங்களில் நீலமணி உண்டாகின்றது.

இதில் வெளிர் நிறமானது பிராமண ஜாதியாம். சிகப்பு நிறமானது க்ஷத்திரிய ஜாதியாம். மஞ்சள் நிறமானது வைசிய ஜாதியாம். கருப்பு நிறமானது சூத்திர ஜாதியாம். 6

நீலத்தில் ஆறுவித தோஷங்களுண்டு. அவைகளின் பெயர்களையும், அவைகளின் இலக்கணங்களையும் கூறுகிறேன். ஐந்துவித குணங்களும் எட்டுவித நிறங்களும் உண்டு அவைகளையும் கூறுகிறேன். 7

நீலக்கல்லின் மேலே அப்ரகத்தைப்போல் படர்ந்திருக்கும். இந்த தோஷத்திற்கு "அப்ரகம்" என்று பெயர்.

शर्करामिश्रितं यत्तु तत् ज्ञेयं तु सशर्करम् ।
तस्मिन् धृते दरिद्रत्वं देशत्यागश्च जायते ॥ ९

भेदसंशयकृत् त्रासः तेन दंष्ट्रिभयं भवेत् ।
भिन्नं भिन्नमिति ख्यातं भार्यापुत्रविनाशनम् ॥ १०

मृत्तिका यस्य गर्भस्था दृश्यते रत्नकोविदैः ।
मृत्तिकागर्भकं नाम त्वग्दोषजननं भवेत् ॥ ११

---

இதைத் தரித்துக்கொண்டால் ஐசுவர்யமும், ஆயுளும் அழிந்துவிடும்.

கல்லில் மணல் சேர்ந்திருக்கும், இதற்கு "ஸசர்க்கரம்" என்று பெயர். இதைத் தரித்தால் தாரித்திரியம் உண்டாகும். தேசத்தை விட்டு ஓடும்படி நேரிடும். 9

பொறிசல் முதலியவைகளிருந்தால், உடைந்திருப்பது போன்ற ஸந்தேகத்தை உண்டுபண்ணும். இந்த தோஷத்திற்கு "த்ராஸம்" என்று பெயர். அதைத் தரித்துக் கொண்டால் பல்லில் விஷமுள்ள ஸர்ப்பாதிகளால் பயம் உண்டாகும்.

உடைந்திருந்தால் அதற்கு "பின்னம்" என்று பெயர். அதைத் தரித்தால் மனைவி மக்களை இழப்பான். 10

கல்வின் மத்தியில் (உட்புறத்தில்) மண்ணிருக்கும். இதற்கு "மிருத்திகா கர்ப்பம்" என்று பெயர். இது சர்ம தோஷத்தை உண்டுபண்ணும். 11

दृषत् प्रलक्ष्यते यस्य गर्भे नीलस्य कोविदैः ।
अश्मगर्भं तदाख्यातं तद्भर्ता परिभूयते ॥ १२

गुरुत्वं स्निग्धकान्तित्वं सुरङ्गः पार्श्वरञ्जनम् ।
तृणग्राहित्वमित्येतं गुणाः पञ्च प्रकीर्तिताः ॥ १३

नीलरत्नसमाभासा वैष्णवीपुष्पसन्निभा ।
अतसीपुष्पसंकाशा चाषपक्षसमद्युतिः ॥ १४

कृष्णाद्रिकर्णिकापुष्पसमानद्युतिधारिणी ।
मयूरकण्ठसच्छाया शम्भोः कण्ठनिभा तथा ॥ १५

विष्णुदेहसमाभासा भृङ्गपक्षसमप्रभा ।
दोषैस्त्यक्तो गुणैर्युक्तः इन्द्रनीलो महामणिः ॥ १६

---

நீலத்தினுள் கல் காணப்படும். இதற்கு "அச்மகர்பம்" என்று பெயர். இதைத் தரிப்பவன் அவமதிக்கப்படுவான்.

இவைகள் நீலமணியின் தோஷங்களாம். 12

கனம், மனதைக் கவரும் காந்தி, நல்ல பூரிப்பு. பக்கங்களில் பூரிப்பு, புல்லைப் பிடிக்கும் தன்மை என்ற இவ்வைந்தும் நீலமணியின் குணங்களாம். 13

விஷ்ணுக் கிராந்திப்பூ, காசாப்பு, ஸுவர்ண சாதகம் அல்லது நீல நிறப்பக்ஷி, கிருஷ்ணாத்ரியிலுள்ள கர்ணிகா (கர்ணிகாரம் ?) புஷ்பம், மயிலின் கழுத்து, நீலகண்டரின் கழுத்து, மஹாவிஷ்ணுவின் உடல், வண்டின் இறகு, இவைகளைப்போன்ற நிறங்கள் நீலமணியின் நிறங்களாம்.

यस्य देहे भवेत्तस्य वित्तमायुर्बलं यशः ।
क्षीरमध्ये क्षिपन्नीलं क्षीर तन्नीलतां व्रजेत् ॥ १७

इन्द्रनीलस्य विज्ञेयः रविनन्दनवल्लभः ।
इन्द्रनीलेधृते सौरिः प्रसन्नः सततं भवेत् ।
आयुश्च महतीं लक्ष्मीं आरोग्यं च प्रयच्छति ॥ १८

---

தோஷங்களில்லாத குணங்களுள்ள நீல ரத்னத்தை சரீரத்தில் தரிப்பவனுக்கு செல்வம், ஆயுள், பலம், புகழ் இவைகள் உண்டாகும். *14—16*

நீலமணியைப் பாலில் போட்டால் அந்தப் பால் முழுமையும் நீல நிறமாகக் காணப்படும். அப்படிக் காணப்பட்டால் அந்த நீலத்திற்கு "இந்திர நீலம்" என்று பெயர். இது சனிபகவானின் ரத்னமாகும். இந்த இந்திர நீல மணியைத் தரித்துக்கொண்டால் சனி பகவான் எப்பொதும் கருணையுள்ளவராவார். ஆயுள், அளவற்ற செல்வம், ஆரோக்கியம் இவைகளைக் கொடுப்பார். *17—18*

இந்திர நீலம் முற்றும்.

## ॥ अथ मरकतम् ॥

तुरुष्कविषयेऽम्भोधेस्समीपे विषमस्थले ।
भवेन्मरकतं रत्नं गुणो दोषोऽस्य कथ्यते ॥ १

दोषास्सप्त भवन्त्यस्य गुणाः पञ्चविधाः स्मृताः ।
भवेदष्टविधा छाया मणेर्मरकतस्य हि ॥ २

अस्निग्धं रूक्षमित्युक्तं व्याधिस्तस्मिन्धृते भवेत् ।
विस्फोटं स्यात्सपिटकं तस्मिन्शस्त्रहतिर्धृते ॥ ३

सपाषाणे भवेद्बन्धुनाशो मरकते धृते ।
विच्छायं मलिनं प्राहुः बाधिर्यं तेन जायते ॥ ४

---

### மரகதம்

துருஷ்க தேசத்தில் ஸமுத்திரத்திற்கு ஸமீபத்தில் மேடுபள்ளமான இடத்தில் மரகதம் உண்டாகின்றது.

மரகதத்தின் தோஷங்கள் ஏழு. குணங்கள் ஐந்து, நிறம் எட்டு விதம் என்று கூறப்பட்டிருக்கிறது. 1—2

நைப்பு அதாவது பளபளப்பு இல்லாததற்கு "ரூக்ஷம்" என்று பெயர். அதை தரித்தால் வியாதியுண்டாகும்.

மரகதத்தினுள் கொப்புளம் காணப்பட்டால் அதற்கு "விஸ்போடம்" என்று பெயர். அதைத் தரித்தால் ஆயுதங்களால் தாக்கப்படுவான். 3

மரகதத்தில் கல் சேர்ந்து இருந்தால் பந்துக்கள் நசிப்பார்கள். இதற்கு "ஸபாஷாணம்" என்று பெயர்.

ஒளி இல்லாமலிருந்தால் அதற்கு "மலினம்" என்று பெயர். அதை அணிந்துகொண்டால் காது செவிடாகும்.

शार्करं शर्करायुक्तं पुत्रशोकप्रदं ध्रुवम् ।
जरठं कान्तिहीनं स्यात् दंष्ट्रिवह्निभयं भवेत् ॥ ५

कल्माषं वर्णशबलं ततो मृत्युभयं भवेत् ।
इति दोषास्समाख्याताः वर्ण्यन्तेऽतः परं गुणाः ॥ ६

निर्मलं कथितं स्वच्छं गुरु स्याद्गुरुतायुतम् ।
स्निग्धं रौक्ष्यविनिर्मुक्तमरजस्कमरेणुकम् ॥ ७

सुराग रागबहुळं इति पञ्च गुणाः स्मृताः ।
एतैर्युक्तं मरकतं सर्वपापभयापहम् ॥ ८

---

மணல் கலந்திருந்தால் அதற்கு "சர்க்கரம்" என்று பெயர். இது நிச்சயமாக புத்திரசோகத்தைக் கொடுக்கும்.

ஒளி மங்கிப்போனதாக இருந்தால் அதற்கு "ஜாடம்" என்று பெயர். அது பல்லில் விஷமுள்ளவைகளாலும் தீயினாலும் பயமுண்டாக்கும். 5

ஒளியில் மஞ்சள் நிறம் கலந்திருந்தால் அதற்கு "கல்மாஷம்" (கல்மாஷம்=விஷம்) என்று பெயர். அதனால் மரண பயமுண்டாகும்.

இவ்விதம் ஏழு தோஷங்களும் கூறப்பட்டன. இனி குணங்களைக் கூறுகிறேன். 6

நல்ல ஒளியுள்ள ரத்தினத்திற்கு "ஸ்வச்சம்" என்று பெயர். கனமுள்ளதற்கு "குரு" என்று பெயர். பளபளப்பு உள்ளதற்கு "ஸ்நிக்தம்" என்று பெயர். மணல் முதலியவைகளில்லாததற்கு "அரஜஸ்கம்" என்று பெயர். சிறந்த ஒளியுள்ளதற்கு "ஸுராகம்" என்று பெயர். இவ்வைந்தும் மரகதத்தின் குணங்களாம், இந்த குணங்களுடன் கூடிய

बर्हिपिञ्छसमाभासा चाषपक्षसमापरा ।
अहिकाचनिभा चान्या तथा शैवलसन्निभा ॥ ९

खद्योतपृष्ठसङ्काशा बालकीरगरुत्समा ।
नवशाद्वलसच्छाया शिरीषकुसुमोपमा ॥ १०

एवमष्टौ समाख्याताः छाया मरकताश्रयाः ।
छायाभिर्युक्तमेताभिः श्रेष्ठं मरकतं स्मृतम् ॥ ११

शैवालवल्लरीच्छायं सुरागं त्रासवर्जितम् ।
अनर्घ्यं तन्मरकतं प्राहुस्सर्वविषापहम् ॥ १२

इति मरकतम् ॥

---

மரகதத்தை அணிந்துகொண்டால் ஸகல பாபங்களும் தீரும். எல்லாவித பயங்களும் தீரும். 7—8

மயிலின் தோகை, நீலநிறப்பக்ஷி, அஹிகாசம் (அஹிகாசம்-சிக்கிமுக்கிக்கல் அல்லது விஷக்கல்) பாசிக்கொத்து—மின்மினிப்பூச்சியின் பின்பக்கம், பச்சைக்கிளிக் குஞ்சின் சிறகு, புதிய பசும்புல், வாகைப்பூ இவ்வெட்டு வஸ்துக்களின் நிறம்போன்ற எட்டுவித நிறங்கள் மரகதங்களுக்குக் கூறப்பட்டிருக்கின்றன. இந்த எட்டுவித நிறமுள்ள மரகதங்கள் மிகச்சிறந்தவைகளாம். 9—11

பாசிக்கொத்தின் நிறமுள்ளதாயும், ஓட்டை, கொப்பளம் முதலிய தோஷமற்றதுமான மரகதமானது விலை மதிக்க முடியாதது என்றும் ஸகல விஷங்களையும் போக்கிவிடுமென்றும் கூறப்பட்டிருக்கிறது. 12

மரகதம் முற்றும்.



## ॥ अथ स्फटिकः ॥

हिमालये सिंहळे च विंध्यते तापितटे तथा ।
स्फटिकं जायते रत्नं नानारूप मनोहरम् ॥ १

हिमाद्रौ चन्द्रसंकाशं स्थूलं कान्तियुतं भवेत् ।
सूर्यकान्तं च तत्रैकं चन्द्रकान्तं तथाऽपरम् ॥ २

सूर्यांशुस्पर्शमात्रेण वह्निं धमति तत्क्षणात् ।
सूर्यकान्तं तदाख्यातं स्फाटिकं रत्नवेदिभिः ॥ ३

पूर्णेन्दुकरसस्पर्शादमृतं क्षरति क्षणात् ।
चन्द्रकान्त तदाख्यातं दुर्लभं स्यात्कलौ युगे ॥ ४

---

**ஸ்படிகம்**

இமயமலை, சிங்களம், விந்தியமலை, தாபீநதி (தப்தி) இந்த இடங்களில் பற்பல விதமான மனோஹரமான ஸ்படிக ரத்னங்கள் உண்டாகின்றன.

இமயமலையில் உண்டானது சந்திரனைப்போன்ற பிரகாசமுள்ளதாம். பெரியதாக இருக்கும். மனோஹரமாகவும் இருக்கும். ஸ்படிகத்தில் ஒரு வகைக்கு ஸௌரிய காந்தமென்றும் மற்றொரு வகைக்கு சந்திரகாந்தம் என்றும் பெயர்.

ஸௌரியகாந்தம் ஸௌரிய கிரணம் பட்டவுடன் நெருப்பைக் கக்கும். சந்திரகாந்தம் என்பது பூரண சந்திர கிரணம் பட்டவுடன் ஜலத்தைப் பெருக்கும். இவ்விரண்டும் கலியுகத்தில் கிடைப்பதரிது. 3—4

अशोकपल्लवच्छायं दाडिमीबीजसमप्रभम् ।
विन्ध्यतापीतटोद्देशे जायते मन्दकान्तिकम् ॥ ५

सिंहळे जायते कृष्णमाकरे नीलगन्धिके ।
पद्मरागभवस्थाने विविधं स्फाटिकं भवेत् ॥ ६

इति स्फटिकः ॥

---

அசோக பல்லவம், மாதுளை முத்து இவைகளைப் போன்ற நிறமுள்ள ஸ்படிகமானது விந்தியத்திலும், தாபீ நதிக்கரையிலும் உண்டாகிறது. இது சிறிது ஒளி குறைந்திருக்கும்.

நீல நிறமான ஸ்படிகம், சிங்களத்தில் நீலகந்தி கிடைக்கும் ஆகரத்தில் கிடைக்கிறது.

பத்மராகம் கிடைக்குமிடத்தில் பற்பல விதமான ஸ்படிகங்கள் உண்டாகின்றன.

ஸ்படிகம் முற்றும்.



॥ अथ पुष्परागः ॥

ईषत्पीतं पवित्रच्छायं स्वच्छं कल्पमनोहरम् ।
पुष्परागमिति ख्यातं रत्नं रत्नपरीक्षकैः ॥ १

इति पुष्परागः ॥

॥ अथ वैडूर्यम् ॥

सिताभ्रधूमसङ्काशं ईषत्कृष्णासितं तु यत् ।
वैडूर्यं नाम तत्प्रोक्तं रत्नवर्णपरीक्षकैः ॥ १

इति वैडूर्यम् ॥

---

**புஷ்பராகம்**

வைரத்தைப் போன்று சிறிது மஞ்சள் நிறம் கலந்த வெண்மையாக இருக்கும். சிறிதளவு மனதைக் கவரும். இதற்கு "புஷ்பராகம்" என்று பெயர் என்று ரத்ன பரீக்ஷை அறிந்தவர்கள் கூறுகின்றனர்.

புஷ்பராகம் முற்றும்.

**வைடூர்யம்**

வெண்மேகம், புகை போன்று சிறிது கருநீலம் கலந்த வெண்ணிறமான ஸ்படிகத்திற்கு "வைடூர்யம்" என்று பெயர் என்று ரத்னங்களின் நிறங்களை அறிந்தவர்கள் கூறுகின்றனர்.

வைடூர்யம் முற்றும்.

॥ अथ गोमेदकम् ॥

मधुबिन्दुसमं वा प गोमूत्रौघसमप्रभम् ।
गोमेदकं तदाख्यातं रत्नं सोममहीभुजा ॥ १

॥ अथ प्रवाळम् ॥

सेतौ सागरमध्ये तु जायते वल्लरीयुता ।
विद्रुमाख्या सुरप्रोक्ता दुर्लभा रत्नरूपिणी ॥ १
पाषाणत्वं भजत्येषा प्रयत्नात्क्वथिता सती ।
प्रवाळं नाम तद्रक्तं वर्णाढ्यं मन्दकान्तिकम् ॥ २

---

**கோமேதகம்**

தேன்பொட்டின் நிறமாகவோ கோமூத்திர தாரையின் நிறமாகவோ இருந்தால், அந்த ஸ்படிகத்திற்கு "கோமேதகம்" என்று பெயர் என்று ஸோமபூபாலன் கூறியுள்ளார்.

கோமேதகம் முற்றும்

**பவழம்**

ராமஸேதுவில் ஸமுத்திரத்தில் பவழமானது கொடியுடன் உண்டாகிறது. இதைத்தான் தேவர்கள் சிறந்த பவழமெனக் கூறுகின்றனர். இதுதான் ரத்னமாகக் கூறப்படுகிறது. இது கிடைப்பது துர்லபம்.

இதை முயற்சியுடன் கொதிக்கவைத்தால் இது கல் போல் கெட்டியான நிலையை அடையும். அத்தகைய பவழம் என்னும் ரத்னம் நல்ல சிவப்பு நிறமுள்ளதாய் இருக்கும். (உரைகல்லில் உரைத்தால்) மங்கலான ஒளியைக்காட்டும்.

பவழம் முற்றும்

पद्मरागस्य नीलस्य ये दोषाः परिकीर्तिताः ।
तैरेव दूषितं रत्नं सन्त्याज्यं स्फाटिकं नृपैः ॥ १

गौरवं स्वच्छता कान्तिः काठिन्यं रत्नजा गुणाः ।
विहाय वज्रं नान्येषु लाघवं शोभनं भवेत् ॥ २

॥ अथ कृत्रिमरत्नज्ञानम् ॥

रत्नानां रूपसाम्यं हि धूर्ताः कुर्वन्ति युक्तितः ।
तेषां परीक्षां वक्ष्यामि रत्नारत्नविचारिणीम् ॥ १

वज्रेण वेधयेद्वज्रं कृत्रिमं चेद्विभज्यते ।
कृत्रिमं मौक्तिकं नश्येत् क्षालितं लवणाम्भसा ॥ २

---

பத்மராகம், நீலம் இவைகளுக்குக் கூறிய தோஷங்களே ஸ்படிகத்திற்கும் கூறப்பட்ட தோஷங்களாம். அத்தகைய தோஷமுள்ள ஸ்படிகங்களை அரசர்கள் விலக்கிவிட வேண்டும். 1

பளுவுள்ளதாக இருத்தல், சுத்தமாக இருத்தல், ஒளியுள்ளதாக இருத்தல், அழுத்தமாக இருத்தல் இவைகள் ரத்னங்களின் குணங்களாம். வைரம் நீங்கலாக மற்ற ரத்னங்கள் லேசாக (கனமில்லாமல்) இருந்தால் அது சுப பலனைக் கொடுக்காது. 2

## போலி ரத்னங்களை அறிதல்

அயோக்கியர்கள் யுக்தியினால் ரத்னங்களைப்போன்ற போலி ரத்னங்களைச் செய்துவிடுகிறார்கள். ஆகையால் உண்மையான ரத்னமா அல்லது போலி ரத்னமா என்பதைத் தெரிந்துகொள்வதற்கு செய்யவேண்டிய பரீக்ஷை முறைகளைக் கூறுகிறேன். 1

माणिक्यादीनि रत्नानि घर्षणात्क्वथनादपि ।
शोधयेद्रत्नवित्प्राज्ञः विज्ञानार्थं तु कृत्रिमे ॥ ३

त्यजति क्वथितं रागं कृत्रिमं तद्विदुर्बुधाः ।
मार्दवं दृश्यते घृष्टे ज्ञेयं तत् कृत्रिमं बुधैः ॥ ०

एवं विचार्य रत्नानि कोशे सञ्चिनुयान्नृपः ।
आयुर्लक्ष्मीं जयं कीर्तिं प्रयच्छन्ति निरन्तरम् ॥ ५

माणिक्यं वज्रवैडूर्यं गोमेदं पुष्परागकम् ।
नीलं मुक्ताप्रवाळं च रत्नं मरकतं नव ॥ ६

---

வஜ்ரத்தை வஜ்ரத்தால் துவாரம் போடவேண்டும். போலி வைரமானால் அது சிதைந்துவிடும்.

உப்பு ஜலத்தில் முத்தை அலம்பவேண்டும். அது போலி முத்தானால் உருக்குலைந்துவிடும். 2

மாணிக்கம் முதலிய ரத்னங்களை உரைத்தும், கொதிக்கவைத்தும் பரீக்ஷிக்கவேண்டும். கொதிக்க வைத்தால் போலி ரத்னம் நிறம் குன்றும். அதைப் போலி என்று அறியவேண்டும்.

ரத்னத்தை உரைத்தால் மிருதுவாக இருந்தால் அது போலி ரத்னமாகும். 3—4

இவ்விதம் ரத்னங்களை பரீக்ஷித்துப்பார்த்து சுத்தமான ரத்னங்களைப் பொறுக்கி எடுத்து நல்ல ரத்னங்களை சேகரித்து பொக்கிஷத்தில் வைத்துக் காப்பாற்றவேண்டும். இந்த ரத்னங்கள் ஆயுள், தனம், ஜயம், கீர்த்தி இவைகளை என்றும் கொடுக்கும். 5

மாணிக்கம், வஜ்ரம், வைடூர்யம், கோமேதகம், புஷ்பராகம், நீலம், முத்து, பவழம், மரகதம் என்பன ஒன்பது ரத்னங்களாகும். 6

போலி ரத்ன பரீக்ஷை முற்றும்.

## ॥ नवरत्नमुद्रिकानिर्माणप्रकार: ॥

मध्ये भानोस्सुमाणिक्यं पूर्वे वज्रं च भार्गवे ।
चन्द्रे मुक्ताऽनलदिशि कुजे याम्ये प्रवाळकम् ॥ १

नैर्ऋत्ये राहोर्गोमेदं नीलं तु पश्चिमे शनेः ।
वायव्ये गुरोः पुष्पराख्यं केतोर्वैडूर्यमुत्तरे ॥ २

ईशान्ये ज्ञो मरकतं एवं स्याद्ग्रहमुद्रिका ॥ ३

इति नवरत्नमुद्रिकाप्रकार: ॥

---

### நவரத்ன மோதிரம் செய்யும் முறை

மத்திய பக்கத்தில் சூரியனுக்கும், கிழக்கில் சுக்கிரனுக்கும். அக்கினி திக்கில் சந்திரனுக்கும், தெற்கில் குஜனுக்கும், தென்மேற்கில் ராகுவுக்கும், மேற்கில் சனிக்கும், வாயு திக்கில் குருவுக்கும். வடக்கில் கேதுவுக்கும், ஈசானியத்தில் புதனுக்கும் இடங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

இவ்விதமே ஸூரியனுக்கு மாணிக்கமும், சுக்கிரனுக்கு வஜ்ரமும், சந்திரனுக்கு முத்தும், செவ்வாய்க்கு பவழமும் ராஹுவுக்குக் கோமேதகமும், சனிக்கு நீலமும், குருவுக்குப் புஷ்பராகமும், கேதுவுக்கு வைடூரியமும், புதனுக்கு மரகதமும், ரத்னங்களாகக் கூறப்பட்டிருக்கின்றன.

எனவே, சூரியனுடைய ரத்னமான மாணிக்கத்தை நடுவில் வைத்து, வஜ்ரம், முத்து, பவழம், கோமேதகம், நீலம், புஷ்பராகம், வைடூர்யம், மரகதம் இவைகளை முறையே கிழக்கு திக்கு முதல் ஈசானிய திக்கு வரையில், வஜ்ரம் முதல் மரகதம் ஈறான எட்டு ரத்னங்களையும் வைத்து மோதிரத்தில் இழைக்கவேண்டும். இதற்கு நவரத்ன மோதிரம் என்று பெயர். *1—3*

நவரத்ன மோதிரம் முற்றும்

## ॥ कृत्रिमरत्ननिर्माणप्रकारः ॥

दग्धशङ्खं ससिन्दूरं समांशं चूर्णयेत्ततः ।
क्षीरैः सद्यः प्रसूतायाः इलाया मर्दयेद्दृढम् ॥ १

पूरयेत्तं तृणप्रोतं नाळे वंशादिसंभवे ।
सुपक्वे चान्नभाण्डे तु यवागूसहिते क्षिपेत् ॥ २

आच्छाद्य पश्चान्मन्दाग्नौ घटे तैलं समुत्क्षिपेत् ।
प्रवाळ(ळं) नाळिकागर्भे जायते पद्मरागवत् ॥ ३

पाचिता नि(त्रि)कषाक्वाथे द्वियामं मन्दवह्निना ।
स्निग्धां सु(मु)कुटकोपेतां कान्तिं याति प्रवाळकम् ॥ ४

---

### போலி ரத்னம் செய்யும் முறை

சுட்ட சங்கும் ஸிந்தூரமும் ஸம எடை எடுத்துப்பொடி பண்ணி பிறகு அதை அப்பொழுது ஈன்ற மாட்டின் பாலை விட்டு பூமியில் நன்கு மர்திக்க வேண்டும். அதை (உருவாகச் செய்து) புல்லில் கோர்த்து மூங்கில் குழாய் முதலியவைகளில் நிரப்பி வைத்துக்கொள்ளவேண்டும். பிறகு பாண்டத்தில் அரிசியை உலைவைத்து அது நன்றாக வெந்து அன்னமாக ஆனபின்பு கஞ்சியுடன் கூடிய அந்த அன்ன பாண்டத்தில் முன் தயாராக வைத்திருக்கும் குழாயை வைத்து அந்தப் பாண்டத்தில் எண்ணையை விட்டு மூடி, பின் மந்தாக்கினியில் எறிக்கவேண்டும். அந்தக் குழாயில் வைத்தவைகள் பவழமாகும். அது பதும ராகத்தைப் போலிருக்கும். 1—3

பிறகு அதை மஞ்சிஷ்டை (மஞ்சட்டிக்) கஷாயத்தில் மந்தாக்கினியில் இரண்டு யாமம் எறித்தால் மனோஹரமான நல்ல ஒளியுள்ள பவழமாகும். 4

## ॥ इन्द्रनीलः ॥

नीलचूर्णं पलैकं तु पूर्वकूप्यां तु यद्द्रवम् ।
तद्द्रवं द्विपलं चूर्णं क्षिप्त्वा सर्वं विलोडयेत् ॥ ५

.... .... .... शीतत्वेन पूर्ववह्निना पचेत् ।
इन्द्रनीलानि तान्येव जायन्ते नात्र संशयः ॥ ६

## ॥ मरकतम् ॥

मञ्जिष्टं तिलकं नीलीं सम(मं) चूर्णं प्रकल्पयेत् ।
काचकूप्यां स्थितं द्रव्ये(यं) सर्वमेव तु लोडयेत् ॥ ७

वर्षोपलान्यनेनैव सिक्त्वा पश्चाच्च (पच्याच्च) वह्निना ।
सर्वे मरकतास्तेन समीचोना भवन्ति हि ॥ ८

---

*இந்திர நீலத்தைப் பற்றிய பகுதி மூலத்தில் முற்றிலும் சரியாக இல்லை.* *5—6*

**மரகதம்**

மஞ்சட்டி, திலகத்தின் (மஞ்சாடிச் செடியின்) புஷ்பம் அவுரி இவைகளை சமபாகம் தூள் செய்து அதைக் கண்ணாடிக் கிண்ணத்தில் போட்டுக் கலந்து, வர்ஷோபலங்களை (ஆலங்கட்டிகளை) அதனுள் பொதிந்து நெருப்பில்வைத்து எரிக்க அவைகள் நல்ல மரகதங்களாகும்.

*(இதிலும் மூலம் சம்பூர்ணமாக இல்லை.)* *7—8*

## ॥ अथ पद्मरागम् ॥



दग्धशङ्खं सदरदं समचूर्णं प्रकल्पयेत् ।
चाचकुप्यां स्थितं द्रव्यं सर्वमेव तु लोडयेत् ॥ ९

वर्षोपलान्यनेनैव सिक्त्वा पश्चाच्च (पच्याच्च) वह्निना ।
पद्मरागा भवन्त्येव समीचीना न संशयः ॥ १०

इति श्रीमन्नारायणविरचिते स्मृतिसारोद्धारे
नवरत्नपरीक्षाध्यायः समाप्तिमगमत् ॥

श्रीसांबसदाशिवार्पणमस्तु ॥

---

### பத்மராகம்

சுட்ட சங்கு, லிங்கம் இவைகளை சமபாகம் பொடி செய்து, கண்ணாடிக் குப்பியில் (கிண்ணத்தில்) அவைகளைக் கலந்து, குலுக்கி இதனால் ஆலங்கட்டிகளை நனைத்து (ஆலங்கட்டிகளை இதனுள் புதைத்து) பிறகு தீயில் எரிக்க பத்மராகக் கற்களாகும். 9—10

ஸ்ரீமந்நாராயணன் செய்த ஸ்மிருதி ஸாரோத்தாரத்தில்
நவரத்ன பரீக்ஷை முற்றும்



॥ श्रीः ॥

॥ श्रीगणेशाय नमः ॥

# ॥ ईश्वरदीक्षितीये रत्नपरीक्षा ॥

सिंहलस्याकरोद्भूता महानीलास्तु ते स्मृताः ।
क्षीरमध्ये क्षिपेन्नीलं क्षीरं चेन्नीलतां व्रजेत् ॥ १

इन्द्रनीलमिति ख्यातमिति चागस्त्याभाषितम् ।

(इति रत्नशास्त्रे अभिधानात् इन्द्रनीलाः क्षीरनीलीकरणसमर्थाः सिंहलोद्भवाः । उत्पत्तिभेदादपि तस्य भेदः प्रतिपादितः रत्नशास्त्रे—)

बललोचसंभूतं हरकण्ठविषोद्भवम् ॥ २

---

## ஈசுவர தீக்ஷிதீயத்தில் ரத்ன பரீக்ஷை

*சிங்களத்தின் ரத்னாகரங்களில் கிடைக்கும் நீலங்கள் மஹாநீலங்களாம் (சிறந்தவைகளாம்).*

*நீல ரத்னத்தைப் பாலில் போட்டால் அந்தப் பால் நீலநிறமாகக் காணப்பட்டால் அதற்கு 'இந்திர நீலம்' எனப்பெயர், என்று அகத்திய முனிவர் கூறியுள்ளார். (என ரத்ன சாஸ்திரத்தில் கூறியிருப்பதால் இந்திரநீலகற்கள் பாலை நீலநிறமாகக் காட்டும் தன்மையுள்ளவைகளாம். இவைகள் சிங்களத்திலுண்டானவைகளாம். அவைகள் உண்டாகும் முறைகளின் பேதங்களாலும், அவைகளின் வகைகள் ரத்ன சாஸ்திரத்தில் கூறப்படுகின்றன.)* 1—2

*பலாசுரனின் கண்களிலிருந்து உண்டானது ஒன்று. பரமேசுவரனின் கழுத்திலுள்ள விஷத்திலிருந்து உண்டானது மற்றொன்று. இவ்விரண்டும் மஹாநீலமென்று ரத்ன சாஸ்திரமறிந்தவர்கள் கூறுகின்றனர்.* 2—3

द्विविधन्तु महानीलं प्रोक्तं तच्छास्त्रवित्तमैः ।
संज्ञा त्वाष्ट्री रवेर्भार्या तत्तेजस्सोढुमक्षमा ॥ ३

आत्मच्छायां नियोज्यागात्तपसे काननं वरम् ।
रविश्च तत्र तां गत्वा दृष्ट्वैवातीव मोहितः ॥ ४

अश्वाकारां च धावन्तीमश्वरूपस्य धावतः ।
यत्र यत्रापतद्रेतस्तत्र तत्र विवस्वतः ॥ ५

महानीला बभूवुश्च सन्धार्या देवमानुषैः ।
विश्वरूपवधप्राप्तदोषशान्त्यै पुरन्दरः ॥ ६

अश्वमेधं चकाराथ तत्समाप्तौ तदङ्गकम् ।
चाक्षुषं च मलं यत्र विमुक्तं तत्र देशके ॥ ७

---

த்வஷ்டாவின் பெண்ணும், சூரியனின் பத்னியுமான ஸம்ஜ்ஞை என்பவள் சூர்ய வீர்யத்தைத் தாங்கமுடியாமல், தனது நிழலைத் (சாயையை) தனக்குப் பதிலாக நிறுத்தி விட்டு, தவப்புரியக் காட்டிற்குச் சென்றாள். சூரியனும் அவளை விரட்டிக்கொண்டு சென்று அவளைக் கண்டு மோஹித்தார். அவள் குதிரை உருவங்கொண்டு ஓடினாள், சூரியனும் குதிரை உருவங்கொண்டு அவளைத் துரத்திக் கொண்டுசென்றார். அப்பொழுது சூரியனுடைய தேஜஸ் பற்பலவிடங்களில் சிந்திற்று. தேஜஸ்ஸு சிந்தியவிடங்களில் மஹாநீலங்கள் உண்டாயின. அவைகள் தேவர்களும் மனிதர்களும் தரிக்கத்தக்கவைகளாம். 3—6

விசுவரூபனை வதைத்த இந்திரன் அந்த பாபத்தைப் போக்க அசுவமேதம் செய்தான். அதன் முடிவில் அவன் கண்களிலிருந்தும், அங்கத்திலிருந்தும் வியர்வை சிந்திற்று அது சிந்தியவிடத்தில் இந்திரநீல மணிகள் உண்டாயின.

इन्द्रनीला इति ख्याता मणयः संभवन्ति हि । इति ॥

मणिप्रवरं–मणिश्रेष्ठम् । लक्षणमुक्तं रत्नशास्त्रे ।

मुक्ताप्रवाळवैडूर्यवज्रनीलानि गारुडम् ॥ ८

पद्मरागं पुष्परागं गोमेदकमतः परम् ।

नव रत्नानि पाषाणाः भासयन्ति सदा नरान् ॥ ९

करीन्द्रजीमूतवराहशङ्खमत्स्याहिशुक्त्युद्भववेणुजानि ।

मुक्ताफलानि प्रथितानि लोके तेषान्तु शुक्त्युद्भवमेव भूरि ॥

आगस्त्ये रत्नशास्त्रे च —

बलो नामाभवच्छ्रीमान् दानवेन्द्रो महाबलः ॥ ११

---

மணிப்ரவரம் என்பதற்கு ரத்னத்தில் சிறந்தது என்று பொருள். அதன் லக்ஷணம் ரத்ன சாஸ்த்திரத்தில் கூறப்பட்டு இருக்கிறது. 6—8

முத்து, பவழம், வைடூரியம், வைரம், நீலம், பச்சை, பதுமராகம், புஷ்பராகம், கோமேதகம் என்ற ஒன்பதுவித கற்களும் ஒன்பது ரத்னங்களாம். இவைகள் மனிதர்களைப் பிரகாசிக்கச் செய்கின்றன. 8—9

கஜஸ்ரேஷ்டம், மேகம், பன்றி, சங்கம், மீன், பாம்பு, சிப்பி மூங்கில் இவைகளில் முத்துக்கள் உண்டாகின்றன என்பது உலகில் பிரஸித்தமான விஷயம். இவைகளில் சிப்பியில் உண்டாகும் முத்துக்களே அதிகமாகக் கிடைக்கின்றன. 10

அகஸ்த்திய மாமுனிவர் கூறியுள்ள ரத்ன சாஸ்திரத்தில் மிகுந்த சோபையும் மஹா பலமும் உடைய பலன் என்ற அசுரன் இருந்தான். அவனுடைய எலும்பு வஜ்ர

तस्यास्थि वज्रं दशनाश्च मुक्तास्तथा च रक्तं खलु पद्मरागः ।
रोमाणि वैडूर्यमिति प्रसिद्धं प्रवाळमासीत्पिशितं महार्घम् ॥

नेत्रं महानीलमभूत्प्रशस्तं पित्तं च गारुत्मतरत्नमासीत् ।
आसीत्कफस्तस्य च पुष्परागः मेदश्च गोमेदकतामवाप ॥

जलजा स्थलजा चेति मुक्ताजार्द्विधा मता ।
वज्राघातप्रकीर्णा या दन्तपङ्क्तिर्बलस्य तु ॥ १४

सा तु त्रयोदशस्थाने विप्रकीर्णाऽभवत्तदा ।
वराहस्य च दंष्ट्रायां फणे च पन्नगाशिनाम् ॥ १५

करिदन्ते बलाकानां कण्ठे स्त्रीणां तथैव च ।
शङ्खे मत्स्ये करे (घने) चैव वंशपुण्ड्रेक्षुपर्वसु ।
शालिस्तम्भे च शुक्तौ च भुजे करटवाजिनः ॥ १६

---

*மாகவும், பற்கள் முத்துக்களாகவும், ரத்தம் பதுமராக மாகவும், உரோமங்கள் வைடூரியமாகவும், மாமிசம் பவழ மாகவும், கண் நீலமணியாகவும், பித்தம் பச்சையாகவும், கபம் புஷ்பராகமாகவும், ஊந்தண் கோமேதகமாகவும் ஆயிற்று என்று கூறப்பட்டிருக்கிறது. 11—13*

*மேலும் முத்துக்களில் ஜலஜம் ஸ்தலஜம் என்று இரண்டுவிதமாம். பலாசுரனின் பற்கள் வஜ்ராயுதத்தால் சிதையுற்று 1. பன்றியின் பல் 2. பாம்பின் படம் 3. யானையின் தந்தம் 4. நாரையின் கழுத்து 5. ஸ்திரீயின் கழுத்து 6. சங்கம் 7. மீன் 8. மேகம் 9. மூங்கில்கணு 10. நாமக்கரும்பின் கணு 11. சம்பாப் பயிரின் தாள் 12. சிப்பி 13. கரடவாஜியின் (கோவேறு கழுதையின்) புஜம் ஆகிய 13 இடங்களில் சிதறின. இந்த 13 இடங் களிலும் முத்துக்கள் உண்டாயின. 14—16*

नारीबलाकाकण्ठाभ्यां भुजात्करटवाजिनः ।
तिस्रो जाताश्च मुक्तास्तु न सन्त्येवातिदुर्लभाः ॥ १७

सुतारत्वं सुवृत्तत्वं नैर्मल्यं घनता तथा ।
स्निग्धताऽस्फुटितत्त्वं च षड्गुणाः परिकीर्तिताः ॥ १८

काकपाणिः (दः) शुकं (स्रवन्) नीरः पार्श्वस्फोटस्तथाऽनलः ।
नीलवर्णोथ दद्र स्तु श्यामलो रक्तबिन्दुकः ॥ १९

एते न धारणे योग्या धर्तुर्हानिप्रदास्सदा ।
प्रवाळः कृमिभक्षश्चेत् वर्जनीयः प्रयत्नतः ॥ २०

---

ஸ்திரீயின் கழுத்து, நாரையின் கழுத்து, கோவேறு கழுதையின் புஜம். இம்மூன்று ஸ்தானங்களில் உண்டாகும் முத்துக்கள் இல்லை என்றே சொல்லிவிடலாம். கிடைப்பது மிகவும் துர்லபம். 17

நல்ல ஒளிவீசும் தன்மை முற்றிலும் உருண்டையான வடிவம். அழுக்கில்லாமை, அதிக எடை நிற்கும் கனம், வழவழப்பு, விரிசல் இல்லாமை என்று முத்துக்களின் நற் குணங்கள் ஆறு விதமாகும். 18

காக்கைக் கால் போன்ற அடையாளமுள்ளது. ஈர நைப்பு உள்ளது. பக்கத்தில் உடைந்தது. நெருப்புப்பொறி போலிருப்பது, நீலநிறமானது, சொரசொரப்பாக இருப்பது. கருமை கலந்த நிறமாக இருப்பது. சிகப்புப்புள்ளியுள்ளது. இத்தகைய தோஷமுள்ள முத்துக்களை தரிக்கலாகாது. அவை தரிப்பவனுக்கு அழிவை உண்டுபண்ணும்.

பூச்சிகளரித்த பவழத்தை விலக்கிவிடவேண்டும். புள்ளியுள்ள வைடூரியத்தை சுபத்தை விரும்புகிறவன்

वैडूर्यं बिन्दुसंयुक्तं न धार्यं शुभलिप्सुभिः ।
वज्रं पर्पटिकायुक्तं बिन्दुयुक्तं विसर्जयेत् ॥ २१

मरकतं(क्तं) पेटकयुतं न धार्यं शुभमिच्छता ।
पुष्परागः पुष्टिवर्धनः ॥

भारद्वाजस्मृतौ च —

बिन्द्वावर्ततुषत्रासलेखाकलंककीलकाः ॥ २२

सप्तैते कथिता दोषाः रत्नशास्त्रविशारदैः ।
जम्बूफलवदाकारस्तत्र चूचुकसन्निभः ॥ २३

चूडामणिवदाकारः बालवत्सस्य शृङ्गवत् ।
अयं चतुर्विधो बिन्दुः स्त्रीसन्ततिविनाशकृत् ॥ २४

---

தரிக்கலாகாது (பர்ப்படீ என்னும்) மெல்லிய புல்லையொத்த கோடுகளுடையது அல்லது புடைப்புள்ளது. புள்ளியுள்ளது, இந்த வைரங்களை ஒதுக்கிவிடவேண்டும். நடுவில் குழிந்த மரகதத்தை சுபத்தை விரும்புகிறவன் தரிக்கலாகாது.

புஷ்பராகம் புஷ்டியை விருத்தி செய்யும்.

பாரத்வாஜஸ்மிருதியில் – "பிந்து, ஆவர்த்தம், துஷம், த்ராஸம், லேகை, களங்கம், கீலகம் என்று ஏழுவித தோஷங்கள் ரத்ன சாஸ்திரங்களை அறிந்தவர்களால் கூறப்பட்டிருக்கின்றன.

அவைகளில் "பிந்து" என்ற தோஷம் நாவல் கனியை போலவும், முலைக்காம்பைப்போலவும், குண்டுமணியைப் போலவும், இளங்கன்றுக்குட்டியின் கொம்மைப்போலவும் நான்கு விதமாகும். இவைகள் ஸ்திரீ ஸந்ததிகளை அழித்துவிடும். 22—24

शङ्खमस्तकसङ्काशः सरिद्वेणिभ्रमोपमः ।
आवर्तो द्विप्रकारोऽयं सदा विभ्रमकारकः ॥ २५

गोधूमचूर्णसदृशः व्याप्य: रत्नं समन्ततः ।
आस्ते तत्तुषसंज्ञोऽयं सर्वदाङ्गकृशप्रदः ॥ २६

त्रासाख्यः त्रुटितप्रख्यः शुक्त्यन्तररुजासमः ।
त्रासस्स द्विप्रकारोय त्रासस्सञ्जननस्सदा ॥ २७

रविरश्मिसमाकारा सूत्रपातवदाकृतिः ।
वर्षपातवदाकारा त्रिधा रेखाऽतिकष्टदा ॥ २८

कळङ्कः कृष्णलोहाभः कृष्णाभ्रसदृशाकृतिः ।

---

"ஆவர்த்தம்" (சுழி) என்பது இரண்டுவிதம். ஒன்று சங்கத்தின் தலையைப்போலிருக்கும். மற்றொன்று, நதிப் பிரவாகத்தின் சுழலைப்போல் இருக்கும். இவ்விரண்டுவித தோஷங்களும் சித்தப்பிரமையை உண்டுபண்ணும். 25

"துஷம்" என்பது கோதுமை மாவைப்போல எங்கும் படிந்திருக்கும். இந்த தோஷம் எப்பொழுதும் உடம்பை இளைக்கச் செய்யும். 26

"த்ராஸம்" என்பது உடைந்தது போலவும், சிப்பியின் மத்தியில் உள்ள பிளவைப் போலவும் இருக்கும். இவ்விரண்டு தோஷங்களும் பயத்தையுண்டுபண்ணும்.

"ரேகை" என்பது சூரிய கிரணம் போலவும், கயிறு விழுந்தது போலவும், மழைக்கால் போலவும் இருக்கும். இம்மூன்றும் மிகுந்த கஷ்டத்தைக்கொடுக்கும். 27—28

शिखिपिञ्छसमाकारः त्रिधैतदसुनाशकृत् ।
कीलकः कीलवत्तिष्ठेत् सर्वदा हृदयार्तिकृत् ॥ २९

एवं रत्नेषु दोषाणां लक्षणं समुदाहृतम् ।
गोमेदकः पुष्परागः वैडूर्यः शीतरुङ्मणिः ।
एते च स्फटिकप्रख्याः फले स्फटिकजातयः ॥ ३० ॥ इति ॥

पद्मरागो रविमणिः शृङ्गारो हारनायका ।
सलोहितो जातशृङ्गः कुरुविन्दोऽतिलोहितः ॥ ३१

सौगन्धिको मरालस्यात् नीलगन्धी तु धू(म्र)लः ।

---

"களங்கம்" என்பது இரும்பு போலவும், கருப்பு மேகம் போலவும், மயில்தோகை போலவும் மூன்றுவிதமாகும். இந்த தோஷம் பிராணஹானியை உண்டுபண்ணும்.

"கீலகம்" என்பது முளையைப்போல் இருக்கும். இது மனோவியாதியை உண்டுபண்ணும். 29

இவ்விதம் ரத்னங்களின் தோஷ லக்ஷணங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

கோமேதகம், புஷ்பராகம், வைடூரியம், பச்சை இவைகளும் ஸ்படிகம் போன்றவைகளே. பலவிஷயத்தில் ஸ்படிக ஜாதிகளேயாம் என்று (பாரத்வாஜஸ்மிருதியில்) கூறப்பட்டிருக்கிறது. 30

பதுமராகத்திற்கு ரவிமணி என்றும், சிருங்காரம் என்றும், ஹாரநாயகம் என்றும் பெயர்.

அதுசிகப்பாக இருந்தால் ஜாதச்ருங்கம் என்று பெயர். அது அதிகச்சிகப்பாக இருந்தால், குருவிந்தம் என்று பெயர். ராஜஹம்ஸ (த்தின் மூக்கின்) நிறமாக இருந்தால், (வெண் சிகப்பு நிறமாக இருந்தால்) ஸௌகந்திகம் என்று பெயர். புகை நிறமாக இருந்தால், நீலகந்தி என்று பெயர்.

पक्वदाडिमबीजाभं माणिक्यं शिखरं मतम् ।
तत्तु पल्लवरागः स्यात् पल्लवेन समप्रभम् ॥ ३२ ॥ इति ॥
गारुत्मतं मरकतमश्मगर्भं हरिन्मणिः ।
गाढमुल्लसितं चैव पेशलं पित्तकं तथा ।
मुग्धं च पृथुकं चेति षड्विधोऽयं हरिन्मणिः ॥ ३३
इति निघण्टुः ॥

उत्पलपरिमळे तु द्वाविंशतिरत्नान्युक्तानि —

वज्रेन्द्रनीलमरकतकर्कतनपद्मरागरुधिराक्षाः ।
वैडूर्यविपुलविमलकराजमणिस्फाटिकशशिकान्ताः ॥ ३४
सौगन्धिकगोमेदकशङ्खमहानीलपुष्परागाख्याः ।
ब्रह्ममणिज्योतीरससीव्यकमुक्ताप्रवाळानि ॥ ३५

---

நன்றாகப் பழுத்த மாதுளை முத்தின் நிறமாக இருந்தால் மாணிக்கம் என்றும், சிகரம் என்றும் பெயர். தளிரைப் போன்ற நிறமுடையதானால் அதற்குப் பல்லவ ராகம் என்று பெயர் கூறப்பட்டிருக்கிறது.

காருத்மதம், மரகதம், அச்மகர்ப்பம், ஹரின்மணி என்று பச்சையின் பெயர்கள் நான்கு. இது காடகம், உல்லஸிதம், பேசலம், பித்தகம், முக்தம், பிருதுகம் என்று ஆறுவிதமாம் என்று நிகண்டுவில் கூறப்பட்டிருக்கிறது. 31—33

உத்பல பரிமளம் என்ற நூலில் 22 வகை ரத்னங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவைகள் வஜ்ரம் 1, இந்திர நீலம் 2, மரகதம் 3, கர்க்கேதனம் 4, பத்மராகம் 5, ருதிராக்ஷம் 6, வைடூரியம் 7, விபுலம் 8, விமலகம் 9, ராஜமணி 10, ஸ்படிகம் 11, சந்திரகாந்தம் 12, ஸௌகந்திகம் 13, கோமேதகம் 14, சங்கம் 15, மஹாநீலம் 16, புஷ்பராகம் 17, பிரஹ்மமணி 18, ஜ்யோதீரஸம் 19, ஸீவ்யகம் 20, முத்து 21, பவழம் 22 என்பனவாம். 34—35

स्निग्धा विशुद्धास्समरागिणश्च
आपीतवर्णा गुरवः स्थिराश्च ।
त्रासव्रणव्याळविवर्जिता ये
कर्केतनास्ते परमं पवित्रम् ॥ ३६

पत्रेण काञ्चनमयेन च वेष्टयित्वा
न्यस्तं यदा हुतवहे भवति प्रकाशम् ।
शीतीकृतं यदि भवेत् न च रूक्षवर्णं
कर्केतनं भवति तत् पृथिवीसमूल्यम् ॥ ३७

आकाशतलसंलक्ष्यः उपलः स्फटिकः स्मृतः ।
मृणालशङ्खधवळः किञ्चिद्वर्णान्तरान्वितः ॥ ३८

---

நல்ல மெருகு (பளபளப்பு), தூஷம் முதலிய தோஷம் இல்லாமை, எங்கும் நிறைந்த ஒளி, சிறிது மஞ்சளான நிறம், கனம், அடர்த்தி இந்த குணங்களிருப்பதுடன் பொறிசல், உடைசல், விகாரமான உருவம் இந்த தோஷங்கள் இல்லாத "கர்க்கேதனம்" என்னும் ரத்தினம் மிகவும் தூய்மையானது. 36

இந்த ரத்னத்தைத் தங்க இலையில் (மெல்லிய தங்கத் தகட்டில்) வைத்துமூடி நெருப்பில் வைத்தால், பிரகாசமாக இருக்கும். (ரத்னத்தின் பிரகாசம் நன்கு தெரியும்.) அதைக் குளிரவைத்தால் அதன் வர்ணம் விகாரப்படாது. இத்தகைய கர்க்கேதன ரத்னத்திற்கு பூமண்டலம் முழுமையுமே விலை மதிப்பாகும். 37

ஆகாசத்தை அதன் வழியே பார்க்குமாறு ஒளி ஊடுருவும் தன்மையுடைய கல் ஸ்படிகம் என்று கூறப்படுகிறது. இது தாமரைத் தண்டுபோலும், சங்கத்தைப் போலும் வெண்மையாக இருக்கும். வேறு நிறங்களும் சிறிது கலந்து காணப்படும். 38

मध्ये च पाण्डरमतीव विशुद्धवर्णं
यत्त्विन्द्रनीलरुचिपूरसमानदेहम् ।
ऐश्वर्यभृत्यजनकं रुधिराक्षमेवं
पक्वं च तत्किल भवेत् सुमनोज्ञवर्णम् ॥ ३९ इति

आदित्यस्य तु पद्मरागममलं मुक्ताफलं शीतगोः
माहेयस्य च विद्रुमं मरकतं सौम्यस्य गारुत्मतम् ।
देवेड्यस्य च पुष्परागमसुरामात्यस्य वज्रं शनेः
नीलं निर्मलमन्ययोस्तु गदिते गोमेदवैडूर्यके ॥ ४०

वाहटे च -

रसे रसायने दाने धारणे देवतार्चने ।
सुलक्ष्माणि सुजातीनि रत्नान्युक्तानि सिद्धये ॥ ४१

---

மத்தியில் வெளுப்பாகவும், நல்ல சுத்தமான நிறமுள்ளதாகவும், நாலாபுறமும் இந்திரநீலம் போன்ற ஒளி வீசுவதாகவும் இருந்தால் இதற்கு "ருசிராக்ஷம்" (?) என்று பெயர். இது நன்கு பக்குவதசையை அடைந்தால் மிகவும் மனதைக் கவரும். இது செல்வத்தையும் பணியாட்களையும் கொடுக்கும். (இவ்வாறு உத்பல பரிமளத்தில் கூறப்பட்டிருக்கிறது).

ஸூர்யனுக்கு பத்மராகமும், சந்திரனுக்கு முத்தும், செவ்வாய்க்குப் பவழமும், புதனுக்குப் பச்சையும், குருவுக்குப் புஷ்பராகமும், சுக்கிரனுக்கு வைரமும், சனிக்கு நீலமும், ராகுவுக்கு கோமேதகமும், கேதுவுக்கு வைடூரியமும் ரத்னங்களாகக் கூறப்பட்டிருக்கின்றன. 40

வாஹடத்தில் கூறியிருப்பதாவது:—

போக பதார்த்தமாக உபயோகிப்பதற்கும், ரஸாயனத்திற்கும், (வியாதி, நரை. ஜரை மூப்பு இவைகளை விலக்கக்

माणिक्यं पद्मरागाख्यं द्वितीयं नीलगन्धि च ।
कुशेशयदलच्छायं स्वच्छं स्निग्धं मरुत् (गुरु) स्फुटम् ।
वृत्तायतं समं गात्रं (त्रे) माणिक्यं श्रेष्ठमुच्यते ॥ ४२

नीलगङ्गाम्बुसंभूतं नीलगर्भारुणच्छवि ।
पूर्वमाणिक्यवत् श्रेष्ठं माणिक्यं नीलगन्धि तत् ॥ ४३

रन्ध्रकार्कश्यामलिन्यरौक्ष्यवैशद्य(स्य) संयुतम् ।
चिपिटं लघुवक्रं च माणिक्यं दुष्टमष्टधा ॥ ४४

---

கூடிய ஔஷதத்திற்கு ரஸாயனம் என்று பெயர்.) தானம் செய்வதற்கும், தரித்துக்கொள்வதற்கும், தெய்வங்களுக்குச் சாத்துவதற்கும், நல்ல லக்ஷணமான நல்ல ஜாதி ரத்னங்களையே உபயோகிக்கவேண்டும். அவைகள்தான் கூறியுள்ள பலனைக் கொடுக்கும். 41

மாணிக்கமானது பத்மராகம், நீலகந்தி என்று இருவகையாம். தாமரை மலரின் இதழின் நிறமும், தூய்மையும் பளபளப்பும், கனமும், பூரிப்பும், வட்டமாய் விரிந்து எங்கும் ஸமமான வடிவமும் பொருந்தியதாக இருக்கும் மாணிக்கம் சிறந்ததாம். 42

நீலமான கங்கா ஜலத்தில் உண்டாகி, உட்புறம் நீல ஒளி கலந்த சிவப்பு நிறமுள்ளது நீலகந்தி மணியாம். முன் மாணிக்கத்திற்குக் கூறப்பட்ட குணங்களுள்ள நீலகந்தி மணி மிகச்சிறந்ததாகும். 43

துவாரம், கரடுமுரடு, மங்கல், பார்வைக்கு விகாரம், (சிதரல் அல்லது உடைவு) தட்டை உருவம், கனமின்மை, கோணல் இவை எட்டும் மாணிக்கத்தின் தோஷங்கள். 44

ह्लादि श्वेतं लघु स्निग्धं रश्मिमत् निर्मलं महत् ।
ख्यातं तोयप्रभं वृत्तं मौक्तिकं नवधा शुभम् ॥ ४५

रुक्षाङ्गं निर्मलं (समलं) श्यामं ताम्राभं लवणोपमम् ।
अर्धशुद्धं च विकटं ग्रन्थिलं मौक्तिकं त्यजेत् ॥ ४६

पक्वबिम्बफलच्छायं वृत्तायतमवासमम् [पांसुलम्] ।
सि(शु)द्धमव्रणकं स्थूलं प्रवाळं सप्तधा मतम् ॥ ४७

पाण्डरं धूसरं रूक्षं सव्रणं कोटरान्वितम् ।
निर्भारं शुद्धवर्णं च प्रवालं नेष्यतेऽष्टधा ॥ ४८

---

மனோஹரமானது, வெண்மையானது, இலேசானது, பளபளப்புள்ளது, ஒளி நிறைந்தது, மங்கலாக இல்லாதது, உருவத்தில் பெரிது, ஜல நிறமானது, வட்ட வடிவமானது ஆகிய ஒன்பது வித குணங்களுடைய முத்துக்கள் புகழப் பட்டவைகளாம். 45

முத்தானது, விகாரமாகவோ, அழுக்குப் படிந்தோ, பச்சையாகவோ, தாமிர வர்ணமாகவோ உப்பைப் போலவோ, பாதி மட்டும் சுத்தமாகவோ, கரடு முரடாகவோ, முடிச்சு விழுந்தோ இருந்தால், அதைத் தள்ளிவிடவேண்டும். 46

கோவைக் கனியின் நிறமுள்ளது, உருண்டையானது, நீண்ட உருவமுள்ளது, அழுக்கு இல்லாதது, சுத்தமானது, வடுவில்லாதது, உருத்தில் பெரிது என ஏழு விதமான பவழங்களும் சிறந்தவை. 47

வெண்மை நிறமானது, அழுக்குப்படிந்தது, விகாரமானது அல்லது கரடுமுரடானது, வடுப்பட்டது அல்லது உடைந்தது, பொந்து விழுந்தது, எடை நிற்காதது, வெளுத்துப்போன நிறமுடையது ஆகிய எட்டுவித பவழங்களும் விரும்பத்தகாதவை. 48

हरिद्वर्णं गुरु स्निग्धं स्फुटद्रश्मिचयं शुभम् ।
मसृणं भासुरं तार्क्ष्यं गात्रं सप्तगुणं मतम् ॥ ४९

कठिनं कर्कशं नीलं पाण्डु कृष्ण सलाघवम् ।
चिपिटं विकटं कृष्णं रूक्षं तार्क्ष्यं न शस्यते ॥ ५०

पुष्परागं गुरु स्निग्धं स्वच्छं स्थूलं समं मृदु ।
कर्णिकारप्रसूनाभं मसृणं शुभमष्टधा ॥ ५१

निष्प्रभं कर्कशं रूक्षं पीतश्यामं नतोन्नतम् ।
कपिलं कलिलं पाण्डु पुष्परागं परित्यजेत् ॥ ५२

---

பச்சை நிறமானது, கனமானது, அடர்த்தியுள்ளது, வீசும் ஒளிக்கதிர்களுடையது, வழவழப்பானது மிகுந்த பிரகாசம் உள்ளது, எங்கும் ஒத்த வடிவமுள்ளது. இவ் வேழும் மரகதத்தின் குணங்களாம். 49

கடினமானது, கறகறப்புள்ளது, நீல நிறமானது, வெண் நிறமானது, கறுப்பு நிறமானது, எடை நிற்காதது, அவல் போன்றது அல்லது தட்டையானது, விரிந்தது, மங்கலானது, விகார வடிவமுள்ளது, இத்தகைய மரகதம் சிறந்ததல்ல. 50

கனம், பளபளப்பு, தூய்மை, பருமன், எங்கும் ஒத்த அமைப்பு, மிருதுவாக இருத்தல், கர்ணிகாரப்பூவின் நிறம் (பொன்னிறம் கர்ணிகாரம் — கொன்னையின் பேதம்) கொழுகொழுப்பு இவ்வெட்டும் புஷ்பராகத்தின் சுபகர மான குணங்களாம். 51

ஒளி இல்லாதது, சொறசொறப்பானது, விகார வடிவ முள்ளது, மஞ்சள் நிறமானது, மேடுபள்ளமானது, செம்பட்டை நிறமானது, கலங்கலானது, (நிச்சயிக்க முடியாத நிறமுள்ளது) வெண்மையானது. இந்த குணங்க ளுள்ள புஷ்பராகங்களை நீக்கிவிடவேண்டும். 52

वज्रं तु त्रिविधं प्रोक्तं नरो नरी नपुंसकम् ।
पूर्वं पूर्वं महाश्रेष्ठं रसवीर्यविपाकतः ॥ ५३

अष्टाश्र चाष्टफलकं षट्कोणमतिभासुरम् ।
निर्जितेन्द्रधनुर्वारित (ध)र पुंवज्रमुच्यते ॥ ५४

तदेव चिपिटाकारं स्त्रीवज्रं वर्तुळायतम् ।
वर्तुळं कर्णकोणाग्रं किञ्चिद्गुरु नपुंसकम् ॥ ५५

स्त्रीपुंनपुंसकं वज्रं योज्यं स्त्रीपुंनपुंसके ।
व्यत्यासन्नैव फलदं पुंवज्रेण विना क्वचित् ॥ ५६

---

வைரமானது, ஆண், பெண், அலி என்று மூன்று விதம். இவைகளில் அலியைவிட, பெண் வைரமும், அதைவிட ஆண் வைரமும் சிறந்ததாம். 53

எட்டுதளம், எட்டுப்பட்டை, ஆறுகோணம், அதிகப் பிரகாசம், (பற்பல நிறமான ஒளியை வீசும்) வானவில்லை யுடைய மேகத்தைப் பழிக்கும் எழில். இவைகளுள்ளது ஆண் வைரமாம். 54

அதுவே அவலைப் போல தட்டையாகவோ நீண்ட வட்ட வடிவமாகவோ இருந்தால் பெண் வைரமாகும். வட்டவடிவமாகவோ ஒரு மூலையில் காது போன்று நீண்டோ சிறிது கனமாகவோ இருந்தால், அது அலி வைரமாம். 55

ஆண் வைரத்தை ஆணும், பெண் வைரத்தைப் பெண்ணும், அலி வைரத்தை அலியும்தான் உபயோகிக்க வேண்டும். இதை மாற்றி உபயோகித்தால் சிறிதும் பலனைக் கொடுக்காது. புருஷ வைரத்திற்கு இந்த விதிவிலக்கு இல்லை. (அதை ஆண், பெண், அலி எல்லோரும் உபயோகிக்கலாம் என்பது பொருள்.) 56

श्वेतादिवर्णभेदेन तदेवैकं चतुर्विधम् ।
ब्रह्मक्षत्रियविट्शूद्रं स्वस्ववर्णे शुभप्रदम् ॥ ५७

उत्तमोत्तमवर्णं हि हीनवर्णे फलप्रदम् ।
न्यायोऽयं भैरवेणोक्तः पदार्थेष्वखिलेष्वपि ॥ ५८

काशः त्रासश्च बिन्दुश्च रेखा च जलगर्भता ।
सर्वरत्नेष्विमे पञ्च दोषास्साधारणा मताः ॥ ५९

जलनीलेन्द्रनीलं च शक्रनीलं तयोर्वरम् ।
श्वेतगर्भितनीलाभ लघु तत् जलनीलकम् ॥ ६०

---

வெளுப்பு முதலிய (வெளுப்பு, சிகப்பு, மஞ்சள், கருப்பு) நிறவேற்றுமையால் வைரம் நான்கு விதமாகும். அவைகள் பிராமணஜாதி, க்ஷத்திரிய ஜாதி, வைச்ய ஜாதி, சூத்ரஜாதி, வைரங்களாகும். அந்தந்த ஜாதி வைரங்களையே அந்தந்த ஜாதியினர் தரிக்கவேண்டும். உத்தமஜாதி ரத்னம் ஹீன ஜாதிக்கு நல்ல பலனையே கொடுக்கும். இந்த நியாயம் எல்லா பதார்த்தங்களுக்கும் கூறப்பட்டது என்று பைரவர் கூறியுள்ளார். 57—58

வெள்ளை படர்தல், பொறிசல், புள்ளி, கோடு, உட்புறம் ஜலம் தங்குதல் (நுரை?) என்ற ஐந்து தோஷங்களும் எல்லாவித ரத்னங்களுக்கும் பொதுவான தோஷங்கள். 59

ஜல நீலம், இந்திர நீலம், என நீலம் இரண்டுவிதம். இவ்விரண்டில் இந்திர நீலம் சிறந்ததாம். உட்புறம் வெளுப்பாகவும், மேலே நீலமாகவும், இருப்பதுபோல் காணப்படுவதுடன் இலேசாகவும் இருப்பது ஜலநீலமாம். உள்ளே கறுப்பாகவும், வெளியில் நீலமாகவும், இருப்பது போல காணப்படுவதுடன் கனமாகவும் இருப்பதற்கு இந்திரநீலம் என்று பெயர். கருநீல நிறமானது, கனமானது, பளபளப்

काण्र्यगर्भितनीलाभं सभारं शक्रनीलकम् ।
एतच्छायं गुरु स्निग्धं स्वच्छं पिण्डितविग्रहम् ॥ ६१

मृदु मध्योल्लसज्ज्योतिः सप्तधा नीलमुत्तमम् ।
कोमलं विहतं वर्णं निर्भारं रक्तगन्धि च ॥ ६२

चिपिटाभ सरूक्षं च जलनीलं तु सप्तधा ।
गोमेदसमरागत्वात् गोमेदं वज्रमुच्यते ॥ ६३

सुस्वच्छगोजलच्छायं स्वच्छं स्निग्धं घनं गुरु ।
निर्दलं मसृण दीप्तं शस्तं गोमेदमष्टधा ॥ ६४

---

புள்ளது. தூய்மையானது, அடர்த்தியான உருவமுள்ளது, மிருதுவானது. நடுவில் வீசும் ஒளியுள்ளது என ஏழுவித மான குணங்களையுடைய நீலம் உத்தமமானது. 60—61

ஸம்பூர்ண நிறம் உண்டாகாதது. ஒரு பாதி நிறம் உள்ளதாகவும், மற்றொரு பாதி நிறம் இல்லாமலும் இருப்பது. அரைப்பங்கு நிறம் உள்ளது. கனமில்லாதது. ரத்த கந்தி (சிறிது செந்நிறம் கலந்தது), அவலைப் போன்றது, பளபளப்பில்லாதது என ஜலநீலம் ஏழுவிதம்.

(கோமளம் என்பதற்கு ரத்தினத்திற்கு இருக்க வேண்டிய நிறம் முழுமையும் உண்டாகாதது என்று பொருள். விஹதம் என்பதற்கு கல்லின் ஒரு பாதியில் நல்ல நிறமுள்ளதும், மற்றொரு பாதியில் கொஞ்சமும் நிறம் இல்லாததும் என்று பொருள். வர்ணம் என்பதற்கு ஸஹஜமாக இருக்கவேண்டிய நிறத்தில் அரைப்பங்கு நிறம் உள்ளது என்று பொருள்.) 62—63

கோமூத்திரம் போன்ற நிறமுடையதாதலால் இதற்கு கோமேதகம் என்று பெயர். இது வஜ்ர ஜாதியைச் சேர்ந்ததாகக் கூறப்படுகிறது.

विच्छायं लघु रूक्षाभ्लं(भं) चिपिडं पटलान्वितम् ।
निष्प्रभं पीतकाचाभं गोमेदं न शुभावहम् ॥ ६५

वैडूर्यं श्यामशुभ्राभं समं स्वच्छं शुभावहम् ।
भ्रमश्शु(च्छु)भ्रोत्तरीयेण गर्भितं शुभमीरितम् ॥ ६६

श्यामतोयसमच्छायं चिपिटं लघु कर्कशम् ।
सप्त(श्याम)गर्भोत्तरीयं च वैडूर्यं नैव शस्यते ॥ ६७

---

நல்ல தெளிவான பசுவின் மூத்திரத்தின் நிறமுள்ளது. சுத்தமானது. பளபளப்புள்ளது. அழுத்தமானது, கனமானது. பிளவில்லாதது. கொழுகொழுப்பானது. ஒளியுள்ளது என கோமேதகம் எட்டுவிதமாம். 63—64

நிறம்இல்லாதது. இலேசானது. பளபளப்பு இல்லாதது போல் இருப்பது. அவல்போல் (தகட்டையாக) இருப்பது வெள்ளை படர்ந்தது. ஒளியில்லாதது. மஞ்சள் பூனைக் காச்சி மணியைப் போலிருப்பது. இவ்வித கோமேதகங்கள் சுபத்தை கொடுப்பவைகளல்ல. 65

பச்சை கலந்த வெளுப்பு நிறமுள்ளதும், ஸமமான உருவமுள்ளதும், சுத்தமாக இருப்பதுமான வைடூர்யம் சுபத்தைக் கொடுக்கும்.

சுழலும் வெண்மையான வஸ்த்திரத்தின் தோற்றத்தை உட்புறத்திலுடையது. சுபபலனைக்கொடுக்கும். (அதாவது வைடூரியத்தினுள் வெண்மையான நூலிழை போன்ற உருவம் காணப்படும். இது எந்தப்பக்கம் திரும்பினாலும் அங்கு தோன்றி ஒளியை வீசும். இதை நூலிழை, நூலோட்டம் என்று கூறுவார்கள். இது உள்ள வைடூரியம் சுபமானது என்பது பொருள்.) 66

கருப்பான நீரின் நிறமுள்ளது. அவலைப்போல (தகட்டை அல்லது சப்பையாக) இருப்பது. இலேசாக

रत्नशास्त्रे च —

प्रजापतिरपः सृष्ट्वा तासु वीर्यमपासृजत् ।
तदण्डमभवद्धैमं सहस्रार्कसमद्युतिः ॥ ६८

यत्र यत्र घनं वीर्यं अपतत् ब्रह्मणः पुरा ।
तत्र तत्राकरा आसन् रत्नानां सुप्रभात्मनाम् ॥ ६९

मुक्तास्फटिकौ सत्वोत्तरात् वीर्यात्, गोमेदमाणिक्यविद्रुमाः राजसोत्तरात्, अञ्जनोपलनीलाद्याः तामसात्, वज्रपुष्परागवैडूर्या रजसः, गुणत्रयात् मरकतम् ॥ इति ॥

---

இருப்பது. கரடுமுரடாக இருப்பது, கறுநிறமான நாலோட்டமுள்ளது இவ்விதமான வைடூரியம். புகழத்தக்கதல்ல. (சுபத்தைக் கொடுக்காது என்பது பொருள்.) 67

ரத்ன சாஸ்த்திரத்தில் கூறியிருப்பதாவது :—

பிரம்மதேவர் ஜலத்தைப் படைத்து, அதில் தனது வீரியத்தைச் சிந்தினார். அது ஆயிரம் சூரியனைப்போன்ற ஒளியுடைய ஸுவர்ணமயமான முட்டையாயிற்று. எந்த எந்த இடங்களில் பிரம்மாவின் கடினமான வீரியம் சிந்திற்றோ, அந்த அந்த இடங்களில் சிறந்த ஒளிநிறைந்த ரத்னங்கள் உண்டாகும் ஆகரங்கள் தோன்றின. 68 – 69

முத்து, ஸ்படிகம் இரண்டும் ஸத்வகுணம் அதிகமுள்ள வீரியத்திலிருந்தும், கோமேதகம், மாணிக்கம் பவழம் இவைகள் ரஜோ குணம் அதிகமுள்ள வீரியத்திலிருந்தும், அஞ்சனக்கல், நீலம் முதலியவைகள் தாமஸ குணத்தில் இருந்தும்; வைரம், புஷ்பராகம், வைடூரியம் இவைகள் ரஜோ குணத்தினின்றும்; மரகதம் முக்குணங்களிலிருந்தும் உண்டாயின. [என்று கூறப்பட்டிருக்கிறது.]

बलासुरङ्गाच्च रत्नोत्पत्तिः श्रूयते ।

विश्वकर्मीये च —

इदानीं खलु वक्ष्यामि पञ्चभूतसमुद्भवान् ।
गुणदोषान् प्रकीर्णांस्तु समाहृत्य पृथक् पृथक् ॥ ७०

निस्तलत्वं सुगन्धत्वं निर्व्रणत्वं मनोज्ञता ।
तथा विगतधातुत्वं इत्येते पार्थिवा गुणाः ॥ ७१

वैषम्यं धातुयुक्तत्वं व्रणत्वं बिन्दुता तथा ।
दोषा रत्नेषु विज्ञेयाः चत्वारो भूमिसंश्रिताः ॥ ७२

---

பலன் என்ற அஸுரனுடைய அங்கங்களிலிருந்தும் ரத்னங்கள் உண்டானதாகக் கூறப்படுகிறது

விச்வகர்மீயத்தில் —

இப்பொழுது. தனித்தனியே வெவ்வேறிடங்களில் கூறப்பட்டுள்ள பஞ்சபூதங்களால் ரத்னங்களில் ஏற்படும் குணதோஷங்களை ஒன்று சேர்த்துக் கூறுகிறேன். 70

மேடு பள்ளங்கள் இல்லாமை, நறுமணமுடைமை, வெட்டுவடு இல்லாமை, கவர்ச்சி, மண், மணல், கல் முதலியவைகளில்லாமை இவைகள் பூமியினால் உண்டாகும் குணங்களாம். 71

உருவம் சீராக இல்லாதிருத்தல், (அதாவது ஒருபுறம் அகலம் மற்றொரு புறம் குறுகல் போன்ற வேற்றுமைகள்) கல், மண், மணல் முதலியன கலந்திருப்பது, வெட்டுப்பட்டு இருப்பது அல்லது உடைந்திருப்பது, புள்ளி விழுந்திருப்பது இவைகள் ரத்னங்களில் பூமியால் ஏற்படும் தோஷங்கள்.

स्नेहत्वं शुद्धता शैत्यं कोमलत्वं मनोज्ञता ।
तोयजाः खलु पञ्चैते गुणा रत्ने विवक्षिताः ॥ ७३

अस्नेहत्वं क्षय(यि)त्वं च लशुनत्वं विवर्णता ।
सशर्करत्वं रत्नानां दोषाः तोयभवाः श्रिताः ॥ ७४

सर्वदा द्युतिमत्वं च रक्ता चोर्ध्वरश्मिता ।
दूरोज्ज्वलनता चैव गुणाः ज्वलनसंभवाः ॥ ७५

त्रासत्वं पिङ्गलत्वं च तथा विगतवर्णता ।
अधोगतप्रभावत्वं दोषा हुतवहाश्रिताः ॥ ७६

---

பளபளப்பாக மெருகிட்டது போலிருத்தல், சுத்தமாக (தோஷமில்லாமல் அதற்குரிய நிறத்துடன்) இருத்தல், குளிர்ச்சி (நீரோட்டம்), அழகு, கவர்ச்சி இந்த ஐந்தும் ரத்னங்களில் ஜலத்தால் வரும் குணங்கள் இவைகள் விரும்பத்தக்கவைகள். 73

மெருகில்லாமை, குறைவுடைமை, (சிம்பல், ஒடுக்கு விழுதல், சப்பையாக இருத்தல் முதலியன) வெள்ளை படர்ந்திருத்தல், (கல்லின் இயற்கை நிறத்தை மறைக்கும்படி அதன்மேல் பூண்டின் தோலியைப்போல் வெண்மை படர்ந்திருத்தல்), நிறமில்லாமை (அதற்கு உரிய வர்ணம் பிரகாசமாய் இல்லாமல் இலேசாய் இருப்பது), கல் கலந்திருத்தல் இவைகள் ரத்னங்களில் ஜலத்தினால் ஏற்படும் தோஷங்கள். 74

எப்பொழுதும் ஒளிவீசுதல், சிவப்பு நிறம், மேல் நோக்கி ஒளிவீசுதல், தூரத்திலிருந்து ஒளிவீசுதல் இவைகள் அக்னியால் உண்டாகும் குணங்கள். 75

பொறிசல், மஞ்சள் நிறம், நிறமில்லாமை, கீழ்நோக்கி ஒளிவீசுதல் இவைகள் அக்னியால் ஏற்படும் தோஷங்கள்.

वृद्धत्वं समरागत्वं द्युतिमत्वं च दीर्घता ।
इमे मारुतसंजाताः गुणा इति बुधैः स्मृताः ॥ ७७

भ्रमत्वं दुर्बलत्वं च शबलत्वं च निद्रुता ।
लघुत्वं कोमलत्वं च दोषा मारुतसंश्रिताः ॥ ७८

नैर्मल्यं सर्वरत्नानां गुणश्चाकर (काश) जः स्मृतः ।
खरत्वं यन्मलेनाढ्यं द्वौ दोषौ व्योमसंभवौ ॥ ७९

स्वाकृतिः गुणवत्ता च वृत्तत्वं समरागता ।
स्वच्छता निमलत्वं च गुणाः साधारणा मणेः ॥ ८०

---

முதிர்ச்சி, எங்கும் ஒரே விதமான நிறைந்த நிறமுடையதாய் இருத்தல், ஒளிவீசுதல், நீண்டிருத்தல் இவைகள் வாயுவினாலுண்டாகும் குணங்கள். 77

குழி விழுதல், அழுத்தமாக இல்லாமல் துர்ப்பலமாக இருத்தல், பல வர்ணமுடையதாக இருத்தல், புள்ளி, கோடு முதலியவைகள் விழுந்திருத்தல், கனமாக இல்லாமல் இலேசாக இருத்தல், முதிர்ந்த வர்ணம் உண்டாகாமலிருத்தல் இவைகள் வாயுவினாலுண்டாகும் தோஷங்கள்.

(பொதுவாக) ரத்னங்கள் தோஷமில்லாமலும் குணமுள்ளவையாகவும் இருப்பது என்பது ஆகாசத்தால் ஏற்படக்கூடியவை. கைக்கு மிருதுவாக இல்லாமல் சொரசொரப்பாக இருத்தல், அழுக்கு முதலிய தோஷங்கள் நிறைந்திருப்பது இவ்விரண்டும் ஆகாசத்தால் உண்டாகும் தோஷங்கள். 79

அழகான உருவம், குணமுடைமை, வட்டவடிவம், எங்கும் ஒரே விதமான நிறம், தெளிந்த ஒளி, தோஷமில்லாமை, இவைகள் எல்லா ரத்னங்களுக்கும் ஸாதாரணமாக இருக்கவேண்டிய குணங்களாம். 80

वैक्रान्तो वज्रसमानगुणो धातुविशेषः । तदुक्तं रत्नसारसंग्रहे–

अष्टाश्रिरष्टफलकः षट्कोणो मसृणो गुरुः ।
शुद्धमिश्रितवर्णैश्च युक्तो वैक्रान्त उच्यते ॥ ८१

विकृन्तयति लोहानि तेन वैक्रान्त उच्यते ।
वज्रस्थाने नियोक्तव्यः वैक्रान्तः सर्वरोगहा ॥ ८२ ॥ इति ।

देव्या शूलेन महता महिषासुरदेहात् उत्पादिता रक्तबिन्दवः ।
(तेभ्यः) वैक्रान्तवज्रमासीदिति कथा ।

पुरा वृत्रवधार्थं विश्वकर्मा दधीचिवंशास्थिना वज्रायुधं कृत्वा

---

வைரத்திற்கு ஸமமான குணமுடைய ஒருவித கல்லுக்கு வைக்ராந்தம் என்று பெயர். இது ரத்னஸார ஸங்கிரஹம் என்னும் நூலில் கூறப்பட்டிருக்கிறது.

இது எட்டு தளமுள்ளதாகவும், எட்டுப்பட்டையுள்ளதாகவும், ஆறு கோணமுள்ளதாகவும், கொழுகொழுப்பாகவும், கனமாகவும் இருப்பதுடன், (சில) சுத்த (ஒரேவித) வர்ணமுள்ளவையாகவும், (சில) கலப்பு வர்ணமுள்ளவையாகவும் இருக்கும். இது வைக்ராந்தம் எனப்படும். 81

இது மற்ற லோகங்களை கிழித்துவிடும். ஆகையாலேயே இது வைக்ராந்தம் என்று கூறப்படுகிறது. வைக்ராந்தமானது வைரத்திற்குப் பதிலாக உபயோகிக்கத் தக்கது. இது ஸகல ரோகங்களையும் போக்கும் என்று கூறப்பட்டிருக்கிறது. 81—82

மஹிஷமர்த்திநீ தேவியானவள் பெரிய சூலத்தால் மகிஷாஸுரனைக் குத்த அவன் தேகத்திலிருந்து சிந்திய ரத்த பிந்துக்களிலிருந்து "வைக்ராந்தம்" என்ற வைரம் உண்டாயிற்று என்பது கதை.

इन्द्राय दत्तवान् । अन्यान्यस्थीनि भूमिपतितानि वज्राकाराण्यासन् । वलासुरास्थीनि च ।

अन्ये तु —

भूस्वभावाद्धि रत्नानि जातानि त्रिविधानि तु ।
उपला रत्नरूपत्वं प्राप्ताः कालान्तरेण वा ॥ ८३
इति ब्रुवते ।

आङ्गीरसमते तु —

महाराष्ट्रे तु कुद्दालो नाम देशोऽस्ति तत्र तु ।
वज्रस्य प्रभया तत्र वज्रमुत्पाद्यते स्फुरत् ॥ ८४

भूमेर्नवसु खण्डेषु खण्ड एष इलावृतः ।
तत्र मेरुगिरेः पार्श्वे दक्षिणे काश्यपो मुनिः ॥ ८५

---

முன்னொரு காலத்தில் விருத்ராசுரனைக் கொல்லுவதற்காக, விசுவகர்மா, ததீசி முனிவரின் முதுகெலும்பினால் வஜ்ராயுதத்தைச் செய்து கொடுத்தான். மற்ற எலும்புகள் பூமியில் விழுந்து வைரங்களாக ஆயின என்றும் பலாஸுரனின் எலும்புகளும் வைரங்களாக ஆயின என்றும் கூறப்பட்டிருக்கிறது.

மற்றும் சிலர், 'பூமியின் இயற்கையாலேயே பற்பல ரத்னங்களும் உண்டாயின என்றும், கற்களே காலக்கிரமத்தில் ரத்னங்களாகமாறின' என்றும் கூறுகின்றனர். 83

ஆங்கீரஸர் என்ற முனிவரின் அபிப்பிராயமோவெனில் மஹாராஷ்டிர தேசத்தில், குத்தாலம் என்ற இடத்தில் இடிகளின் (மின்னல்களின்) ஒளிகளால் பிரகாசமான வைரங்கள் உண்டாகின்றன என்பதாம். 84

பூமியின் ஒன்பது கண்டங்களில் இந்த கண்டம் இலாவிருதமாம். மேருமலையின் தென்பக்கத்தில் தேவர்களும்

सुरासुरहितो(क्षितौ) ह्यास्ते ज्योतिष्मत्यास्तटे शुभे ।
आकारास्तत्र सन्ति स्म वज्राणां बहलत्विषाम् ॥ ८६

तैः पीठिकाऽमरावत्याः निर्मिता विश्वकर्मणा ।
श्वेतद्वीपे हरेर्वेश्म तथा बिन्दुसरस्तटम् ॥ ८७

पुरी भोगवती नाम भर्तुर्हिमवतः पुरी ।
द्वारवत्यां हि कृष्णस्य गृहं तैरेव निर्मितम् ॥ ८८

---

அஸுரர்களும் வஸிக்குமிடத்தில் காசியப முனிவர் வஸித்து வருகிறார். இது அழகான ஜ்யோதிஷ்மதீ நதிக்கரையில் இருக்கிறது. அங்கு மிகச்சிறந்த ஒளியுள்ள வைரங்கள் கிடைக்கும் சுரங்கங்கள் இருக்கின்றன. 85—86

அவ்விடத்தில் எடுத்த வைரங்களால்தான் விசுவகர்மா அமராவதியில் பீடிகைகளை (திட்டாணிகளை, உட்காரும் இடங்களை)க் கட்டினான்.

சுவேதத்வீபத்தில் மஹாவிஷ்ணுவின் வாஸஸ்தலத்தையும் நிர்மாணம் செய்தான். பிந்து ஸரஸ்ஸின் அடித்தளங்களையும் படிக்கட்டுகளையும் கட்டினான். இமய மலைக்கு தலைவன் அல்லது ஹிமவானுடைய போகவதீ என்னும் பட்டணத்தையும் நிர்மாணம் செய்தான்.

துவாரகையில் கிருஷ்ணனின் கிருஹத்தையும் அந்த வைரங்களால்தான் கட்டினான். 87—88

उत्तराः कुरवः सिन्धुदेशाश्चाप्याकरौ मतौ ।
मेरोरुत्तरसानुश्च यत्रासीत् शिखिवाहनः ॥ ८९

आरोहति नरेन्द्राणां मकुटं न कदाप्यधः ।
मङ्गलाभरणे वज्रं कुलस्त्रीणां न योजयेत् ॥ ९०

तद्युक्तं गुणमङ्गल्यं तासां वैधव्यदं भवेत् ।

विश्वकर्मीये च —

मूर्ध्नि न धारयेत् वज्रं शिरसापि च योषिताम् ॥ ९१

---

உத்தரகுரு, ஸிந்து தேசம். இவ்விரண்டு இடங்களிலும் வைரங்கள் கிடைக்கும் சுரங்கங்கள் உள்ளன.

முருகக்கடவுள் வஸித்த மேருமலையின் வடபாக்கத்தி லுள்ள மலைச்சாரலில், மிகமிகச் சிறந்த வைரங்கள் உண்டாகின்றன. இவைகள் அரசர்களின் கிரீடங்களிலே தானிருக்கும். அதைவிட்டு எப்பொழுதும் கீழே இறங்காது.

வைரத்தைக குலஸ்திரீகளின் மங்களாபரணத்தில் (மங்களாபரணம் — தாலி) இழைக்கக்கூடாது. வைரம் இழைத்தது குணமுள்ளதானாலும் அது அவர்களுக்கு வைதவ்யத்தை உண்டுபண்ணும். 89—91

''ஸ்திரீகள், தலையின் முன்பாகமாகிய உச்சி மண்டை யிலோ, பின்பாகத்திலோ வைரத்தைத் தரிக்கக்கூடாது'' என்று விசுவகர்மாவின் நூலில் கூறப்பட்டுள்ளது.

आगस्त्ये च —

चातुर्वर्ण्यबहिर्भूतः न स्पृशेत् कुलिशं नरः ।

॥ अथ पद्मरागः ॥

विप्रजातिर्जातरङ्गः क्षत्रियः कुरुविन्दकः ॥ ९२

सौगन्धिकं तु वैश्यः स्यात् गोपाङ्गो नीलगन्धि च ।

गोपाङ्गः, नीलगन्धि इति नामद्वयं शूद्रजातेः ।

॥ मरकतम् ॥

विभिन्नमरुणस्याण्ड कटिसूत्रे गरुत्मतः ॥ ९३

---

"நான்கு ஜாதிகளுக்கு அப்புறப்பட்டவன் வைரத்தைத் தொடவும் கூடாது" என்று அகஸ்தியர் இயற்றிய நூலில் கூறப்பட்டிருக்கிறது. 91—92

**பத்மராகம்**

பத்மராகத்தில் ப்ராஹமண ஜாதிக்கு ஜாதரங்கம் என்றும், க்ஷத்திரிய ஜாதிக்குக் குருவிந்தம் என்றும், வைசிய ஜாதிக்கு ஸௌகந்திகம் என்றும், சூத்திர ஜாதிக்கு கோபாங்கம், நீலகந்தி என்று இரண்டு பெயர்களும் கூறப்பட்டிருக்கின்றன. 92—93

**மரகதம்**

விநதையானவள், அருணன் உண்டான பச்சை நிறமான உடைந்த முட்டையோட்டை, கருடனுடைய அரைநாளில் அன்புடன் அணிவித்தாள். அந்த ஓடு நழுவி

विनता योजयामास प्रणयान्मेचकप्रभम् ।
शिथिलं त्वपतत् भूमौ यस्यां तां चाकरं विदुः ॥ ९४

पित्ते दैत्यपतेर्हृते फणभृतां पत्या निजं प्रापिते
लोकं पत्ररथेश्वरो निजबलादाहृत्य तज्जग्धवान् ।
वेगादुड्डयनेन संभृतपरिक्लेशः क्षणादर्णवो-
पान्तेष्वाकुलमुज्जहार गरुडो देशे तुरुष्केऽपि च ॥ ९५

तत्कारणान्मरतकं गारुत्मतमितीरितम् ।

---

பூமியில் விழுந்தது. அது எங்கே விழுந்ததோ அந்த விடத்தில் மரகதங்கள் உண்டாகும் சுரங்கம் உண்டாயிற்று என்று கூறுகிறார்கள். 93—94

நாகராஜாவான வாஸுகி பலாசுரனுடைய பித்தத்தை எடுத்துக்கொண்டு தனது லோகத்திற்குச் செல்லுகையில், கருடன் தனது வலிமையினால் அதை அபஹரித்துத் தின்றான். பின் அதிவேகமாகப் பறக்கையில் உண்டான களைப்பினாலே, அந்தப் பித்தத்தை ஸமுத்திரக் கரையிலும் துருஷ்கதேசத்திலும் சிதறும்படி கக்கினான். அக்காரணத்தினாலேயே, மரகதமானது காருத்மதம் என்று கூறப்படுகிறது. 95

மோஹினியைக் கண்டு மோஹித்த ஈசுவரனுடைய வீரியம் சிந்தியவிடங்களில் மரகதச்சுரங்கங்கள் உண்டாயின

मोहिनीं दृष्ट्वा ईश्वरस्य यत्र रेतोऽपतत् तत्र मरतकस्य आकरा आसन् ।

शास्ता चाप्यभवत्तत्र तद्वीर्याद्वनदेवता ॥ ९६

पुष्पाह्वयः गिरिकाचः शङ्खमृतजं चेति त्रयो मरतकभेदाः ॥

॥ अथ पुष्परागः ॥

हिरण्याक्षेण युध्यत आदिवराहस्य घोणाग्रनिष्पादिताः श्लेष्मकणिकाः यत्रापतन् तत्र ताः पुष्परागोपला आसन् ।

हेमच्छायं शिरोवृत्तं ज्योतिरङ्गारनिर्मलम् ।

कान्त्या मनोहरं स्निग्धं पुष्परागं प्रशस्यते ॥ ९७

---

அவ்விடத்தில் ஈச்வர வீர்யத்தினால் வனதேவதையான சாஸ்தாவும் (ஐயனாரும்) உண்டானார்.

புஷ்பாஹ்வயம் – கிரிகாசம் – சங்கமிருதஜம் என்று மரகதத்தின் பேதங்கள் மூன்று. 96

**புஷ்பராகம்**

ஹிரண்யாக்ஷனோடு ஆதிவராஹமூர்த்தி சண்டை செய்யும்பொழுது, அவனுடைய மூக்கு நுனியிலிருந்து சிலேஷ்மத் திவிலைகள் எங்கெங்கு விழுந்தனவோ அங்கங்கு புஷ்பராகக் கற்கள் உண்டாயின.

தங்க நிறமாகவும், மேலே வட்டவடிவமாகவும் (அல்லது தலைபோல் வட்டவடிவமாகவும்) நெருப்புத் துண்டம்போல் சுத்தமான ஒளியுடையதாகவும், மனதைக் கவரும் பிரகாசமுடையதாகவும், நல்ல மெருகுடையதாகவும் இருக்கும் புஷ்பராகமானது புகழப்படுகிறது. 97

पारियात्रस्य शृङ्गाणि मन्दरस्य च सानवः ।
पुरं पुरन्दरस्यापि तदीया च सभा पुनः ॥ ९८

तत्पुष्परागविहितं विधिना विश्वयोनिना ।

## ॥ अथ विद्रुमः ॥

स्वया तन्वा पुरा ब्रह्मा पितॄणामसृजत्कुलम् ॥ ९९

तया सन्ध्यात्मना तन्वा यत्र यत्र मलानि हि ।
त्यक्तानि तत्र तत्रासन् विविधा आकरा अपि ॥ १००

---

பாரியாத்ர மலையின் சிகரங்கள் மந்தரமலையின் தாழ்வரைகள், இந்திரனுடைய பட்டணமாகிய அமராவதி, இந்திரனுடைய கொலுமண்டபம் இவைகள், அந்தப் புஷ்பராக மணிகளாலேயே. உலகத்தைப்படைத்த பிரஹ்ம தேவரால் ஸ்ருஷ்டிக்கப்பட்டன. 98—99

## பவளம்

முன்னொரு காலத்தில். பிரம்மதேவர் தனது உடலிலிருந்து பித்ருதேவர்களைப் படைத்தார். ஸந்தியாகால வடிவமான அவ்வுடலிலிருந்து வியர்வை முதலிய கழிவுப் பொருள்கள் பற்பலவிடங்களில் விழுந்தன. அவைகள் விழுந்தவிடங்களில். ரத்னச் சுரங்கங்கள் உண்டாயின.

முன்னொரு காலத்தில், மலைகள் பறந்துசென்று உலகத்தை அழித்தன. அப்பொழுது இந்திரன் மலைகளின் சிறகுகளை வஜ்ராயுதத்தால் வானத்திலேயே சிதைத்தான்,

वज्रपाणिः पुराऽऽकाशे लोकनाशं वितन्वताम् ।
पक्षस्य कदनं चक्रे पततां धरणीभृताम् ॥ १०१

न्यपतन्त पुरे देशे लूनपक्षा महीधराः ।
गिरीणां पात्यमानानां पक्षशातसमुद्भवाः ॥ १०२

निपेतुः क्षतजा यत्र खनेस्तत्र समुद्भवः ।
मात्रा विभिन्नदेहस्य सप्तसप्ताश्वसारथेः ॥ १०३

निपेतुः खण्डखण्डानि यासु यासु स्थलीषु च ।
तासु तास्वाकरा आसन् विद्रुमाणां प्रसूतये ॥ १०४

यदा जघान भगवान् केशवो मधुकैटभौ ।
यत्र श्लक्ष्णं तयोर्मांसं तत्र विद्रुमसम्भवः ॥ १०५

---

சிறகுகள் விழுந்தன. சிறகுகளை இழந்த மலைகளும், பட்டணங்களிலும், தேசங்களிலும் ஆங்காங்கு விழுந்தன அவைகளின் சிறகுகளை வெட்டியதால் உண்டான ரக்தங்கள் சிந்தியவிடங்களில் பவழங்கள் உண்டாகின்றன. 101—103

அருணன் இருந்த முட்டையை விநதை உடைத்தாள். அந்த முட்டையின் ஓடுகள் விழுந்த இடங்களில், பவழங்கள் உண்டாகும் ஆகரங்கள் உண்டாயின. 103—104

மஹாவிஷ்ணு மதுகைடபர்களை வதம்செய்த பொழுது, அவர்களுடைய மனோகரமான மாமிசங்கள் விழுந்த இடங்களில், பவழங்கள் உண்டாகின்றன. இனி அதிகம் சொல்லத் தேவையில்லை.

इत्यलं बहुना ॥

आदित्यतरुणोपमं – तरुणादित्योपमम् ॥ इत्यर्थः ॥

॥ ईश्वरदीक्षितीये रत्नपरीक्षा सम्पूर्णा ॥

॥ रत्नपरीक्षा सम्पूर्णा ॥

---

ஆதித்தியதருணோபமம் என்ற பதத்திற்கு, நடுப்பகல் சூரியனைப்போன்றது என்பது பொருள். — [சுவடியில் பொருள் கூறப்பட்டுள்ள இந்தப்பதம் சுலோகத்தில் இல்லை ஆயினும், मांसं என்ற சொல்லுக்கு க்ரியாபதம் காணப்படாமையால் மூலத்தில் எழுத்தாளரின் கவனக் குறைவால் இந்த பதம் விடப்பட்டு, மூலம்—

यदा जघान भगवान् केशवो मधुकैटभौ ।
यत्र श्लक्ष्णं तयोर्मांसं आदित्यतरुणोपमम् ।
विकीर्णं न्यपतद्भूमौ तत्र विद्रुमसम्भवः ॥

என்று இருந்திருக்கக்கூடுமா என்பதை வித்வான்கள் ஆராய்க.]

ரத்ன பரீக்ஷை முற்றும்

॥ श्रीः ॥

॥ श्रीगणेशाय नमः ॥

# ॥ हालास्यमाहात्म्ये रत्नपरीक्षा ॥

( पूर्वग्रन्थद्वये अनुक्तानां केषाञ्चिद्विषयाणां संग्रहः । )

## ॥ नवरत्नानि ॥

पृथिव्यां यानि रत्नानि ये चान्ये लोहधातवः ।
सर्वं तद्विलिखेद्वज्रं वज्रं तैर्न विलिख्यते ।
तस्माद्वज्रं च रत्नानां श्रेष्ठमाहुर्मनीषिणः ॥ १

वारक्रमेण वीक्षेत माणिक्यादिमणीनथ ।
आदित्यवारे माणिक्यं सोमवारे तु मौक्तिकम् ॥ २

---

# ஹாலாஸ்ய மாஹாத்மியத்தில் ரத்னபரீக்ஷை

(முன்னிரு நூல்களில் சொல்லப்படாத
சில கருத்துகளின் தொகுப்பு)

## நவரத்தினங்கள்

உலகிலுள்ள எல்லா ரத்தின வகைகளையும், உலோக தாதுக்களையும் வயிரம் கீறும். ஆனால் அவற்றைக் கொண்டு வயிரத்தைக் கீறமுடியாது. அதனால் வயிரம் மற்றெல்லா ரத்தினங்களையும் விடச் சிறந்ததென அறிஞர்கள் கூறுகின்றனர். 1

மாணிக்கம் முதலிய ரத்தினங்களை அவற்றிற்குரிய நாட்களிலேயே பரிசோதிக்கவேண்டும். மாணிக்கம்,

विद्रुमं भौमवारे च सौम्ये मरकतं तथा ।
पुष्परागं गुरोर्वारे वज्रं वारे भृगोरपि ॥ ३

नीलं वारे रवेस्सूनोर्गोमेदं शनिवारके ।
वैडूर्यं शशिनो वारे इति वीक्षाविनिर्णयः ॥ ४

शुद्धवस्त्रास्तृतं पीठं शुद्धदेशे निधाय च ।
माणिक्यादीनि रत्नानि मण्डलाकृति विन्यसेत् ॥ ५

मध्ये तु पद्मरागं च मुक्तादीनि यथाक्रमम् ।
पूर्वादिदिक्षु विन्यस्य तत्र तत्र समर्चयेत् ।
आदित्यादिग्रहान्नित्यं तत्तत्पुष्पैस्समर्चयेत् ॥ ६

---

*கோமேதகம் இவ்விரண்டையும் ஞாயிற்றுக்கிழமையிலும், முத்து வைடூரியம் இவற்றைத் திங்கட்கிழமையிலும், பவழத்தைச் செவ்வாய், மரகதத்தைப்புதன், புட்பராகத்தை வியாழன் வயிரத்தை வெள்ளி, நீலத்தை சனி ஆகிய கிழமைகளிலுமே பரீக்ஷிக்கவேண்டும்.* *2—4*

*சுத்தமான ஒரு இடத்தில் ஒரு பீடத்தைக் கல்பித்து. அதன்மீது சுத்தமான வஸ்திரத்தைப் பரப்பி, மாணிக்கம் முதலிய ரத்தினங்களை அதன்மேல் வட்ட அமைப்பாக வைக்கவேண்டும். பதுமராகத்தை நடுவிலும், அதைச்சுற்றி முத்து முதலிய (மற்ற) ரத்தினங்களை அவற்றிற்குரிய கிழக்கு, தென்கிழக்கு முதலிய திசைகளிலும் அமைத்து, அந்த ரத்தினங்களில் சூரியன் முதலிய ஒன்பது கிரகங்களையும், அவை ஒவ்வொன்றுக்கும கூறப்பட்ட மலர்களைக் கொண்டு அருச்சிக்கவேண்டும்.* *5—6*

## ॥ वज्रम् ॥

कोसलं च शिरीषाभं कालिङ्गं पीतवर्णकम् ।
मातङ्ग मल्लिपुष्पाभं शुभ्रं हिमवदुद्भवम् ॥ ७

महाराष्ट्रोद्भवं रक्तं सौवीरं कृष्णमेव च ।
पौण्ड्रमुत्पलवर्णाभं पिङ्गलं मागधं तथा ॥ ८

देवताभेदतो वज्रं बहुधा संप्रकीर्तितम् ।
शिरीषपुष्पकदलीवंशाभं वैष्णवं मतम् ॥ ९

शुक्लं षडश्रं माहेन्द्रं याम्यं भृङ्गोत्पलप्रभम् ।
शाल्मलीकिंशुकाभं च वज्रं वायव्यमीरितम् ॥ १०

---

### வயிரம்

கோசலநாட்டு வயிரம் சிரீஷமலரின் நிறமாகவும் கலிங்கத்து வயிரம் மஞ்சளாகவும், மதங்கமலையின் வயிரம் மல்லிகைமலரின் நிறமாகவும், இமயமலை வயிரம் நல்ல வெண்மையாகவும், மகாராஷ்டிரத்தின் வயிரம் சிவப்பாகவும், பௌண்டிர தேசத்து வயிரம் நீலோத்பலம் போன்ற நிறமுடையதாகவும், மகதநாட்டு வயிரம் கபில நிறமாகவும் இருக்கும். 7—8

அவற்றுக்குரிய தேவதைகளைப்பொருத்தும் வயிரம் பலவகைகளாகக் கூறப்பட்டுள்ளன. சிரீஷ மலர், வாழை இலை, மூங்கில் இவற்றைப்போல பசுமை நிறமுடைய வயிரத்திற்கு தேவதை விஷ்ணு. வெண்மையாயும் அறு கோணங்களுடையதாயும் இருக்கும் வயிரத்திற்கு தேவதை மகேந்திரன். தேன் வண்டு, நீலோத்பலம் இவற்றை யொத்த நிறமுடையதற்கு யமனும். கிளுவை, பலாசம் இவற்றின் மலரைப்போல (சிவப்பு) நிறமுடையதற்கு

कर्णिकारप्रसूनाभं वारुणं सौम्यमम्बुभम् ।
इन्द्रकोपनिभं सौरमाग्नेयममलप्रभम् ॥ ११

विप्रस्स्फटिकसङ्काशः शशलोचनवन्नृपः ।
कदलीदलवद्वैश्यश्शूद्रस्तु करवालवत् ॥ १२

वज्रैराभरणं युक्तं बिभ्राणो रणमूर्धनि ।
अक्षतः परशस्त्रेण नृपतिर्विजयी भवेत् ॥ १३

अल्पदेशाधिपः पृथ्वीं लभते सागराम्बराम् ।
दारिद्र्यमुरगो वह्निः पिशाचा देवयोनयः ।
अपमृत्युरपि प्रेक्ष्य दूरे परिहरन्ति तम् ॥ १४

---

வாயுவும், கர்ணிகாரமலர் போன்ற ஒளியுடையதற்கு வருணனும், நீர் போல் தெளிந்த ஒளியுள்ளதற்கு புதனும், இந்திர கோபம் போன்ற நிறமுள்ளதற்குச் சூரியனும், மாசற்ற (வேறு நிறக்கலப்பற்ற) ஒளியுள்ள வைரத்திற்கு அக்னியும் தேவதைகளாவார்கள்.

ஸ்படிகம் போன்ற (வெண்மை) ஒளியுள்ள வயிரம் பிராம்மண வருணமென்றும், முயலின் கண் போன்ற (சிவப்பு) ஒளியுள்ளது க்ஷத்திரிய வருணமென்றும், வாழை இலை போன்று (பச்சை) ஒளியுள்ளது வைசியவருணமென்றும், கத்திபோல் (நீல) நிறமுடையது நான்காவது வருண மென்றும் கொள்ளப்படுகிறது. 12

வயிரங்கள் இழைக்கப்பெற்ற ஆபரணங்களை தரித்துக் கொண்டிருக்கும் அரசன் போர்முனையில் பகைவரது ஆயுதங்களால் காயமடையாது வெற்றிவீரனாகத் திகழ்வான்.

ஒரு சிறிய நாட்டுக்கு அரசனாயிருப்பவன் கடல் சூழ்ந்த உலகத்தையே தன் ராச்சியமாகப் பெறுவான். வறுமையும், பாம்பும், நெருப்பும், பேய்களும், தேவர் இனத்தவரும், துர்மரணமும் அவனைக்கண்டு தூரத்தில் விலகிச்செல்லும்.

## ॥ मौक्तिकम् ॥

शङ्खजं मौक्तिकं श्वेतं कपोताण्डनिभं वरम् ।
यत्तु मत्स्यशिरोजातं पाटलीपुष्पसन्निभम् ॥ १५

मौक्तिकं घनसंभूतमधिसूर्यप्रभोदयम् ।
नारीबलाकाकण्ठाभ्यां भुजात्कटवाजिनः ॥ १६

त्रिभ्यो जाताश्च मुक्तास्तु न सन्त्येवातिदुर्लभाः ।
वंशजं मौक्तिकं श्रेष्ठं वर्षोपलसमप्रभम् ॥ १७

पोत्रिदंष्ट्रोद्भवं रक्तं सार्पं नीलप्रभायुतम् ।
करिदन्तोद्भवं पीतं तथा पुण्ड्रेक्षुसम्भवम् ॥ १८

---

## முத்து

சங்கிற் பிறந்த சிறந்த முத்து வெண்மை நிறமும் புறாவின் முட்டையின் வடிவமும் பெற்றிருக்கும். மீனின் தலையிற்றோன்றும் முத்து பாதிரிப்பூவின் நிறத்தை யொத்திருக்கும். 15

மேகத்தில் உண்டாகும் முத்து உதிர்க்தம் சூரியனின் ஒளியையுடையதாய் இருக்கும். பெண்டிர் கழுத்து. நாரையின் கழுத்து. கோவேறு கழுதையின் தோள் ஆகிய இம் மூன்றிடங்களிற் பிறக்கும் முத்துக்கள் கிடைக்கத்தகாதவை. அவை (இப்போது) இல்லையென்றே சொல்லிவிடலாம். மூங்கிலில் பிறக்கும் முத்து மிகவும் சிறந்தது. ஆலங்கட்டியையொத்த நிறமுடையது. 16—17

பன்றியின் பற்களிலிருந்து கிடைக்கும் முத்து சிவப்பு, பாம்பினிடம் (படத்தில்) உண்டாகும் முத்து நீலநிறமுடையது. யானையின் தந்தத்திலிருந்தும், நாமக்கரும்பின்

तथैव शालिस्तम्बोत्थं शुक्तिजं सोमसन्निभम् ।
बाहुल्याद्गुणबाहुल्याच्छलाघ्यं शुक्तिसमुद्भवम् ॥ १९

॥ पद्मरागः ॥

मक्का कालापुरं चैव तुम्बुरुस्सिंहलं तथा ।
कृतादिक्रमतस्तस्य चाकराः परिकीर्तिताः ॥ २०

लघु वज्रं प्रशंसन्ति गुरुत्वं पद्मरागके ।
ऊर्ध्वरश्मिरधोरश्मिः पार्श्वरश्मिश्च यः क्रमात् ॥ २१

पद्मरागास्तु विज्ञेया उत्तमाधममध्यमाः ।
गोभूमिविप्रकन्यानां दातुर्याजिरखस्य च ॥ २२

---

கணுவிலிருந்தும், நெற்பயிரின் தண்டிலிருந்தும் உண்டாகும் முத்துக்களின் நிறம் மஞ்சள். சிப்பியில் பிறக்கும் முத்து சந்திரனைப்போன்ற ஒளி படைத்திருக்கும். அதிக அளவில் கிடைப்பதாலும், நல்ல குணங்கள் நிறைந்திருப்பதாலும் சிப்பியில் பிறக்கும் முத்தே போற்றுதற்குரியதாகும். 18–19

**பதுமராகம்**

மக்கா, காலாபுரம், தும்புரு, சிங்களம் ஆகிய நாடுகள் கிருதயுகம் முதலிய நான்கு யுகங்களில் முறையே பதுமராகம் உண்டாகும் இடங்களாகக் கூறப்பட்டுள்ளன. 20

வயிரத்தில் இலேசானதையும், பதுமராகத்தில் பளுவானதையும் பெருமையாகக் கூறுகின்றனர்.

மேல் நோக்கியும், கீழ்நோக்கியும், இரு பக்கங்களிலும் ஒளிக்கதிர் வீசும் பதும ராகங்கள் முறையே உத்தமம், அதமம், மத்திமம் எனக் கொள்ளப்படவேண்டும்.

कर्तृश्च पुण्यमाप्नोति जातरङ्गस्य धारणात् ।
धारयेत्कुरुविन्दं यस्स सम्राट् भवति ध्रुवम् ॥ २३

यस्तु सौगन्धिकं धत्ते सर्वदा यशसाऽतुलः ।
गवाङ्गं धारयेद्यस्तु क्षीरसस्यसमृद्धिमान् ॥ २४

दोषहीनमथ लक्षणैर्युतं
पद्मरागमणिमुद्वहन्ति ये ।
तेऽत्र रत्नमधिकं प्रयान्ति च
स्थैर्यगां च कमलां सरस्वतीम् ॥ २५

॥ मरकतम् ॥

इति गुणगणयुक्तं दोषसङ्घैर्विहीनं
मरकतमवनीन्द्रो धारयेद्रत्नवर्यम् ।

---

கோதானம், பூமிதானம், கன்னிகாதானம், இவற்றைச் செய்தவனும், அசுவமேத யாகத்தைச் செய்தவனும், அடையும் புண்ணியத்தை ஜாதரங்கம் என்னும் பதுமராக வகையைத் தரிப்பவன் அடைகிறான்.

குருவிந்தத்தை யணிபவன் சக்ரவர்த்தியாவது திண்ணம். சௌகந்திகத்தை யணிபவன் செல்வத்தாலும் புகழாலும் நிகரற்றவனாவான். கவாங்கம் என்னும் பதுமராகத்தைத் தரிப்பவன் பால் செறிவையும், பயிர்ச் செழிப்பையும் நிரம்பப் பெறுவான். 21—24

குற்றமற்றதும், குணங்களமைந்ததுமான பதுமராக மணியை எவர்கள் தரிக்கிறார்களோ அவர்கள், மேல் மேலும் அதிகமான ரத்தினங்களைப் பெற்று, என்றும் அகலாத (லக்ஷ்மியையும்) செல்வத்தையும், (ஸரஸ்வதியை யும்) கல்வியையும் பெறுவார்கள். 24

जयति रिपुमहीपानाहवे वारणेन्द्रै-
र्बहुभिरपि हयौघैः पत्तिसङ्घैश्च युक्तः ॥ २६

॥ प्रवाळम् ॥

तस्मात्प्रवालं निर्दोषं काङ्क्षिन्यश्च विशेषतः ।
धारयेयुस्सुखायुष्यसुपुत्रारोग्यसिद्धये ॥ २७

इति स्कान्दपुराणे अगस्त्यसंहितायां हालास्यमाहात्म्ये नवरत्नविक्रयो नाम त्रयोविंशोऽध्यायः ॥

श्रीरस्तु ॥

---

**மரகதம்**

இவ்வாறு எல்லா நற்றன்மைகளும் பொருந்திக் குற்றங்களில்லாத மரகதம் என்றும் உயர்ந்த ரத்தினத்தை தரிக்கும் அரசன், பகை மன்னர்களைப் போரில் வென்று சிறந்த யானைகளையும், பல குதிரைப் படைகளையும், காலாட் படைகளையும் பெற்று விளங்குவான்.

**பவழம்**

ஆகையால் சுகம், நீண்ட ஆயுள், நல்ல புத்திரர்கள், நோயற்ற வாழ்வு இவற்றைப்பெற விரும்புபவர்கள். அதிலும் விசேஷமாகப் பெண்டிர்கள் குற்றமற்ற பவழத்தைத் தரிக்கவேண்டும். 27

இவ்வாறு ஸ்காந்த புராணத்தில், அகஸ்திய ஸம்ஹிதையில், ஹாலாஸ்ய மாகாத்மியத்தில் நவரத்ன விக்ரயம் என்னும் 23-வது அத்தியாயம் முற்றும்



